## இப்பொழுது விற்பனையாகிறது!

# மங்கை

### பிப்ரவரி 1996

- உள்ளத்தின் ஓசைகள் —**அனுராதா ரமணன்**
- காஞ்சிப் பெரியவர் திருவாழ்வில்... —**எஸ்.வி. சம்பத்குமார்**
- சிறப்புப் பேட்டி —**சிவசங்கரி**
- வடபாதி பூமாத்தம்மன் —**வசந்தி சுந்தரராஜன்**
- தலையெழுத்தை வீட்டின் அமைப்பினால் மாற்ற முடியுமா? —*வாஸ்து சாஸ்திர நிபுணர்* **ரவிராஜ்**
- தொண்டுக்கு ஒரு ஆலமரம் —**நடிகை ரேவதி**
- ஸ்ரீ அகஸ்தியர் வழிபட்ட சீவலப்பேரி துர்காம்பிகா —**நெல்லை அழகேஷ்**
- பெண் விடுதலை வேண்டும் —**சுதா சுந்தர்ராமன்**
- அப்பாவின் நிலம் —**படுதலம் சுகுமாரன்**
- கண்ணே கலைமானே —**விமலா ரமணி**
- மருத்துவ கேள்வி பதில்கள் —**டாக்டர் ஆர். கண்ணன்**
- செவ்வாய் தோஷம் நீங்க பரிகாரங்கள் —**காஞ்சி ரங்கமணி**
- எம்.எஸ். அம்மாவிடம் கற்றவை —**அனுராதா சுரேஷ் கிருஷ்ணமூர்த்தி**
- சரஸ்வதிக்கு தனியாக கோவில் —**அம்பாள் மகன்**
- இனிய இல்லறம் —**யாகவா தம்பதி**
- இலங்கை வானொலியின் தமிழ்க்குயில் —**ராஜேஸ்வரி சண்முகம்**
- புனித ஆரோக்கிய அன்னை —**ரமணி**
- ஸ்ரீ ஜயேந்திரர் பதில்கள்

தையலுக்கு வாழ்வுதரும் தையல், கல்யாண நேரம் - புதிய பகுதி அறிமுகம்

மற்றும்

கதைகள், கவிதைகள், வண்ணக் கோலங்கள், ஏராளமான வீட்டுக் குறிப்புகள்.

**விலை ரூ. 9/-**

# ANNOUNCING THE



**The first six books, splendid in their content, press, marking the Golden Jubilee of Chanda**




A novelette on three lads befriending an unusual stranger – and their strange adventure, in a village turned into an island by flood.




A fairytale novella opening up into fascinating worlds and introducing gripping characters – rich with 42 imaginative illustrations.




A second selection of stories from the immortal Jatakas, unforgettable for their moral, wit, and wisdom.

**How to get the books at an easy price.**

If you are a subscriber to Chandamama (in any language) between the ages of 6 and 16, you are eligible to the membership of the Chandamama Young Scholars' Club. If you subscribe to Chandamama (in any language) before May 1996, the offer is open to you. You can fill up the form given here on the right side and mail it to us, while sending a token fee of Rs. 50. either by M.O. or by a bank draft drawn in the name of CHANDAMAMA YOUNG SCHOLARS' CLUB. You can then order all or any number of these books at much less than their original price. You get a handy gift of a School Companion Note Book and a decent badge.




What is more, you can participate in talent contests and different activities which the Club proposes to hold in the future.

# CHANDAMAMA BOOKS

**llustrations and production–are soon to roll out of the**
**mama. Written by: Manoj Das. Illustrated by Sisir Datta**




A selection of legends and parables, some of which are believed to have been narrated by the Buddha, their radiance even now undiminished.




A garland of gems from the great treasure of India's folklore and ancient fiction. Each story has a message, as relevant today as it was ever before.




An invitation into the delightful world of ancient tales, legends and parables. Each story enriches us with prudence and helps us understand life better.

**MEMBERSHIP FORMALITIES WILL BE PROCESSED ONLY BY END OF FEBRUARY 1996.**

MEMBERSHIP CARD







BADGE

NOTE BOOK

Dear Sir,

Please enrol me a member of the Chandamama Young Scholars' Club.

My Chandamama subscription No. is........................................

I am sending my Membership fee of Rs. ........................ by M.O./Draft.
I look forward to my acceptance - gift.

Full Name : ............................................................ Signature

Name of Parents : ............................................................

Mailing Address : ............................................................

Permanent Address : ............................................................

Date of Birth : ............................................................

Class : ..................... School............................................

# முதன் முதலாக
# பரீட்சித்து பார்ப்பதற்கான திட்டம்

## வெள்ளை புள்ளி



18 வருடங்களாக தொடர்ந்த பரீட்சையினால், வெள்ளைத் தழும்புக்கான சிகிச்சையில் வெற்றி கிடைத்துள்ளது. இது எவ்வளவு சக்தி வாய்ந்தது என்றால் சிகிச்சையை ஆரம்பித்த உடனேயே, 38 மணி நேரத்தில் தழும்பின் நிறம் மாறக் தொடங்கி, கூடிய சீக்கிரத்தில் தழும்பு உண்டாவதற்கான காரணங்களை அழித்து, தோலின் நிறத்தோடு நிரந்தரமாக சேர்ந்து விடுகிறது. இப்போது விளம்பரத்திற்காக, நீங்கள் முதன்முதலாக பரீட்சித்து பார்ப்பதற்காக 7 நாட்களுக்கான மருந்து இலவசமாக அளிக்கப்படுகிறது. இதன் மூலம் நீங்கள் பரீட்சித்து பார்த்து குணத்தை அறியலாம். திருப்தி ஏற்பட்டால் மட்டுமே சிகிச்சையை தொடரலாம். அதனால் மனம் தளர்ந்த வியாதிஸ்தரும், வேறு சிகிச்சை பெறும் வியாதிஸ் தரும் இந்த திட்டத்தின் பலனை அடையலாம். வியாதிஸ்தரின் வயது, வியாதி பாதிக்கப்பட்ட இடம், வியாதி எவ்வளவு நாட்களாக உள்ளது என்பனவற்றையும் கண்டிப்பாக எழுதி அனுப்பவும்.

## முடி உதிர்தல் / நரைத்தலுக்கு சிகிச்சை



தலைமுடி உதிர்வதற்கோ தலைமுடி நரைத்தலுக்கோ கவலைப் படவேண்டாம். பழைய ஆயுர்வேத புத்தகத்தில் எழுதப்பட்ட மிகச் சிறந்த கூட்டு முறைப்படி ஆராய்ச்சி செய்யப்பட்ட மருந்து கலவை உபயோகிப்பதால் தலைமுடி உதிர்தல் அல்லது நரைத்தல் முதலியவை முடியின் வேர்களில் இருந்து தடை செய்யப்படுகிறது. இந்த பகுதியில் புதிய முடி வளர்ந்து நரைத்த முடி கருமை நிறமாக மாறுகிறது. அது உங்கள் மூளையை குளிர்ச்சியாகவும் நினைவு சக்தியைக் கூர்மையாகவும் ஆக்குகிறது. ஆண்களும் பெண்களும் முடியின் வியாதி, எவ்வளவு நாட்கள் உள்ளது என்பதை விவரமாக எழுதவும். சிகிச்சை முறை மற்றும் ஆலோசனைக்கு எழுதுங்கள். சிகிச்சை விலை ரூ. 100/- மட்டும்.

## SHYAM AYURVED BHAVAN

(SB-3) P.O. Katrisarai (Gaya) - 805 105 Ph. 06112 - 74311





# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி




## சிறுவர்களுக்குச் சமமே

கடந்து போன 1995ஐ யுனிசெப் என்னும் உலகக் குழந்தைகள், நிறுவனம் சிறுமியர் ஆண்டாக அறிவித்திருந்தது. அது தன் ஆண்டு அறிக்கையில் சிறுமியர்களுக்கு முக்கியத்துவம் அளிப்பதைக் குறிப்பிட்டுள்ளது.

இந்தியாவில் 100 ஆண்களுக்கு 93 பெண்கள் என்ற வீதத்தில் இருக்கிறார்கள். கேரளாவில் பெண்கள் சராசரியாக, 94 வயது வரை வாழ்கிறார்கள். குழந்தைகள் இறப்பதும் கேரளாவில் 1000க்கு 52தான். இதற்குக் காரணம் கல்வி, சுகாதாரம் வாழும் முறை போன்றவை. இவ்வாறு யுனிசெஃப் தன் அறிக்கையில் குறிப்பிட்டு சிறுமியருக்கு ஆரம்பக் கல்வி கட்டாயப் படுத்தப்பட வேண்டுமென்று வலியுறுத்துகிறது.

நாம் ஒரு புதிய நூற்றாண்டை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறோம் என்று கூறிக் கொண்டிருந்தாலும் 21ம் நூற்றாண்டில் அந்த எதிர்பார்க்கும் நிலையை எட்டிப் பிடிக்க இன்னமும் ஐந்து நூற்றாண்டுகள் பிடிக்குமோ என்ற ஐயமே ஏற்படுகிறது. எனவே இன்றைய நிலைமாறி சிறுமியரும் சிறுவருக்குச் சமமாக வர வேண்டும். இதற்கான முயற்சியைச் செய்வோம்.




**மதிமுகம்: 98 பிப்ரவரி 1996 புன்னகை: 2**

**தனிப்பிரதி: ரூ.5.00 வருட சந்தா: ரூ.60.00**




செய்திகளும்தகவல்களும்

# இளம்பிள்ளைவாதம் இனி வராது!

இளம்பிள்ளைவாதநோய் சிறுவர், சிறுமியரைத் தாக்கி, அவர்களது வாழ்வையே குலைத்து விடுகிறது. இந்த பயங்கர நோய் பிள்ளைகளையும் பெற்றோர்களையும் பெரிதும் கவலையுறச்செய்கிறது. உடல்நலமற்ற நிலையில் இந்நோயின் கிருமிகள் உடலில் புகுந்து எலும்பு, தசை, நரம்பு ஆகியவற்றை வலுவற்றனவாக ஆக்கி விடுகின்றன. இந்நோய் கண்ட சிறுவர், சிறுமிகளின் கை கால்கள் இயங்காது பயனற்றுப் போகின்றன. இதை ஆரம்பநிலையில் தடுக்காவிட்டால் பின்னர் குணப்படுத்தவே முடியாது என்று கருதுகிறார்கள். எனவே இந்நோய் வராமல் பாதுகாத்துக் கொள்வதே சிறந்தது.

அமெரிக்காவின் ஜோன்ஸ் எட்வர்ட் வாக் என்பவர் இளம்பிள்ளை வாதத்தைத் தடுக்கும் ஊசி, மருந்தை 1945ல் கண்டு பிடித்தார். இதைக் குறித்த காலத்துள் ஊசி வாயிலாகக் குழந்தைகளுக்குச் செலுத்தியதால் எவ்வளவோ குழந்தைகள் இந்நோயிலிருந்து தப்பின. இம்மருந்தால் இளம்பிள்ளைவாத நோயைத் தடுத்து ஒழித்து விட முடியுமென்றும் நம்பினார்கள். ஆனால் இந்த வாக்வாக்சின் ஒரு சிலருக்கே கிடைத்தது. பல லட்சம் பேர்களுக்குக் கிடைக்கவில்லை.

சில ஆண்டுகளுக்குப்பின் அமெரிக்காவின் ஆல்ஃபிரட் பிகுவ் ஷபின் என்பவர் போலியோ சொட்டு மருந்தைக் கண்டுபிடித்தார். ஷமின் வாக்ஸின் சொட்டு மருந்து பலருக்கு கிடைத்தது. பல நாட்டு அரசாங்கங்கள் இம்மருந்தை வாங்கித் தம் நாட்டுக் குழந்தைகளுக்குக் கொடுத்தன. இம் மருந்தின் இரண்டு சொட்டுகளைக் குழந்தையின் வாயில் விட்டால் போதும். ஆனால் இதைக் குழந்தைக்கு மூன்று வயது ஆவதற்குள் கொடுக்க வேண்டும். அதுவும் குறிப்பிட்ட முறையில் குறிப்பிட்ட காலங்களில் கொடுக்க வேண்டும்.

இருபது ஆண்டுகளுக்குமுன் பெரியம்மை, நோயை இது போன்ற முறையில்தான் ஒழித்தார்கள். 1995ல் 145 நாடுகள் தம் நாட்டில் இளம் பிள்ளைவாத நோய் இல்லை என அறிவித்தன.

நம் நாடும் மற்றும் 70 நாடுகளும் இளம் பிள்ளை வாத நோயை ஒழிக்க இன்னமும் போராடி வருகின்றன.

உலகிலுள்ள இளம்பிள்ளை வாத நோயாளிகளில் பாதிக்கும் மேல் நம் நாட்டில் இருக்கிறார்கள். எனவே உலகே நம்நாட்டைத்தான் கவனித்து வருகிறது. நம் அரசாங்கமும் இந் நோயை ஒழிக்கத் தீவிர நடவடிக்கைகளில் இறங்கி டிசம்பர் 9, ஜனவரி 20 ஆகிய தேதிகளை தேசிய போலியோ ஒழிப்பு நாளாக அறிவித்து அந்நாட்களில் மூன்று வயதிற்குட்பட்ட குழந்தைகளுக்கு போலியோ சொட்டு மருந்து கொடுக்க எல்லா அரசு மருத்துவமனைகளிலும், சுகாதார நிலையங்களிலும் ஏற்பாடுகளைச் செய்துள்ளது. நம் நாட்டில் சுமார் 750 லட்சம் குழந்தைகளுக்கு இந்த சொட்டு மருந்தைக் கொடுத்தாக வேண்டும். இம் மருந்து இலவசமாகக் கொடுக்கப்படுகிறது. பெற்றோர்கள் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று அரசாங்கம் வேண்டிக் கொண்டுள்ளது.

டிசம்பர் 9ல் சில ஆயிரம் குழந்தைகளைத் தவிர மற்றவர்களுக்குச் சொட்டு மருந்து கொடுக்கப்பட்டது. ஜனவரி 20ந் தேதி அவர்களுக்கும் இரண்டு சொட்டுகள் மருந்து கொடுக்கப்பட வேண்டும். முன்பு கொடுக்கப்பட்டவர்களுக்கும் கொடுக்க வேண்டும்.

அரசு நிறுவனங்களோடு பல தனியார் நிறுவனங்களும் இம் முயற்சியில் ஈடுபட்டுள்ளன. இப்படியே உற்சாகத்துடன் மூன்று ஆண்டுகள் முயன்று வந்தால் நம் நாட்டிலிருந்து இளம் பிள்ளை வாத நோயை அறவே ஒழித்து விடலாம்.

இந்த விஷயத்தை நீங்கள் உங்கள் நண்பர்களுக்கும் பெற்றோர்களுக்கும் அக்கம் பக்கத்து வீடுகளில் உள்ளவர்களுக்கும் கூறுங்கள். உலகில் இளம்பிள்ளை வாத நோயே இல்லாது போக எல்லோரும் ஒத்துழையுங்கள்.



# தேவையானதைக் கொடு!

மாளவ தேச மன்னன் மகாசேனன் ஒரு நாளிரவு மாறுவேடத்தில் நகரில் திரிந்து வந்த போது ஓரிடத்தில் ஒரு கல்லில் பட்டு இடறிக் கீழே விழுந்துவிட்டான். தலையிலும் காலிலும் பலத்த காயம் ஏற்பட்டது. இதை அங்கு அருகிலிருந்த ஒரு குடிசையில் வாழும் ஏழை மனிதன் பார்த்து ஓடி வந்து அவனைத் தூக்கி ஒரு மரத்தடியேகொண்டு சேர்த்தான். அதன்பின் தனக்குத் தெரிந்த பச்சிலைகளைப் பறித்து வந்து அவற்றின் சாற்றை மன்னனின் காயங்களில் தடவினான்.

மன்னனின் காயங்களின் எரிச்சல் நின்றது. அவன் அந்த ஏழைக்குத் தன் நன்றியைத் தெரிவித்து அவனைப் பற்றி விசாரித்தான். அவனும் ''சொல்வதென்றால் எவ்வளவோ குறைகளும், கோரிக்கைகளும் உள்ளன. அவற்றை யார் தீர்க்கப் போகிறார்கள்?'' என்றான். மன்னனும் ''கவலைப்படாதே. நான் ஆசி கூறினால் உன் விருப்பம் நிறைவேறிவிடும்'' என்றான்.

அந்த ஏழையும் ''நான் அரசனாக விரும்புகிறேன்'' எனவே மன்னனும் ''இதென்ன ஆசை! எல்லோரும் பணம் வேண்டும், புகழ் வேண்டும், சுகவாழ்வு வேண்டும் என விரும்புவார்கள். நீ அரசனானால் இந்த மூன்றில் எது ஒன்றும் உனக்குக் கிடைக்காதே'' என்றான்.

ஏழையும் ''ஏன் கிடைக்காது?'' என்று கேட்கவே மன்னனும் ''அரசனிடமுள்ள பணம் மக்கள் பணம். புகழை விட அவனுக்குக் கெட்ட பெயர்தான் அதிகம் வரும். சுகபோகங்கள் அவனுக்குக் கிடைக்க வாய்ப்புகள் இருந்தாலும் பொறுப்புகள் மிக அதிகம். எனவே இம்மூன்றும் ஏழைக்குத்தான் சுகமளிக்கும். அரச

—சிவனார் செல்வன்—

னுக்கு இவற்றால் பயனே இல்லை'' என்றான்.

ஏழையும் ''நான் மன்னனாக விரும்புவது என்னை ஒருவன் புகழ்ந்து கொண்டே இருக்க வேண்டும் என்பதற்காகவே. மன்னனைப் பற்றிப் பலர் காவியங்கள் எழுதுகிறார்கள். ஆனால் ஒரு ஏழையைப் பற்றி யாரும் காவியம் புனைவதில்லையே!'' என்றான். மன்னனும் ''பூ! இது தானா உன் விருப்பம்? இது நிறைவேறும்படி ஆசி கூறுகிறேன்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

அந்த ஏழைக்கு இருப்பது ஒரே குடிசை அதில் இருப்பவன் அவன் ஒருவனே. மறுநாள் மன்னன் ஒரு கவிஞரை அந்த ஏழையின் குடிசைக்கு அனுப்பி வைத்தான். கவிஞரைக் கண்ட ஏழை ''ஐயா! தாங்கள் என் குடிசைக்கு வந்த காரணம் என்னவோ?'' என்று கேட்டான். கவிஞரும் அவனைப் பற்றி ஒரு காவியம் எழுத வந்திருப்பதாகக் கூறினார்.

ஏழையும் ''என்னைப் பற்றிக் காவியமா? என் சிறப்புகள் என்ன?'' என்று கேட்க கவிஞரும் ''உன்னைப் பற்றிய விவரங்களைக் கூறு. அவற்றிலிருந்து உன் சிறப்புகள் என்ன என்று நான் தெரிந்து கொண்டு விடுவேன்'' என்றார்.

ஏழையும் ''நான் பிறந்ததும் என் தாய் தந்தையரை இழந்து விட்டேன். நான் எந்த வீட்டிலிருந்தாலும் அந்த வீட்டில் பெருத்த நஷ்டமே ஏற்



பட்டது. முடிவில் சில பிரமுகர்கள் சேர்ந்து எனக்கு இந்த குடிசையைப் போட்டுக் கொடுத்தார்கள். நான் காட்டிற்குப் போய் கட்டைகள் எடுத்து வந்து விற்றுப் பிழைத்து வருகிறேன்'' என்றான்.

கவிஞரும் ''தினமும் நீ காட்டிற்குப் போவதால் அங்கு எதாவது துணிகரச் செயலைச் செய்திருப்பாயே'' எனவே அவனும் ''ஒருமுறை காட்டில் ஒரு நரியைப் பார்த்து ஓடியே வந்து விட்டேன். அதன் பிறகு இரண்டு நாட்களுக்குக் காட்டின் பக்கமே போகவில்லை. வாழ் நாட்களை எப்படியாவது கழித்தாக வேண்டுமே. அதனால் மறுபடியும் காட்டிற்குப் போனேன்'' என்றான்.



கவிஞரும் ''ஏதாவது தானதர்மம் செய்திருக்கிறாயா?'' என்று கேட்டார். அவனும் ''நானே சிரமப்படும்போது நான் எப்படி தான தர்மங்கள் செய்ய முடியும்? ஆனாலும் எப்போதாவது தானதர்மம் செய்வேன். அது எதற்குத் தெரியுமா? கடவுள் பக்தர்களைப் பரீட்சிப்பாராம். அத்தகைய பரீட்சையில் வெற்றி பெற்று பெயர் பெறுவதற்காகத்தான்'' என்றான்.

கவிஞரும் ''ஓய்வு நேரங்களில் ஏதாவது காவியங்களை நீ படிப்பது உண்டா?'' என்று கேட்கவே ''எனக்கு ஓய்வு ஏது? அப்படி ஓய்வு நேரம் கிடைத்தாலும் படுத்துத் தூங்கி விடுவேன்'' என்றான். கவிஞரும் ''உனக்குப் படிக்கவாவது தெரியுமா?'' என்று கேட்கவே அவனும் ''ஏன் தெரியாது? காவியங்களைப் படித்துப் புரிந்து கொள்வேன்'' என்றான்.

கவிஞரும் ''ஓ! உன் போன்ற ஏழை காவியங்களைப் படித்துப் புரிந்து கொள்வதும் ஒரு சிறப்பு அம்சம் தானே'' என்றார். ஏழையும் ''இந்தச் சிறப்பு அம்சம் என்னிடம் இல்லாவிட்டால் நாளை நீங்கள் என்னைப் பற்றி எழுதப் போகும் காவியத்தை எப்படிப் புரிந்து கொள்வதாம்?'' என்றான்.

கவிஞரும் ''உன்னை எக்கோணத்தில் பார்த்தாலும் நீ தரித்திரம் பிடித்தவனே. உன்னைப் பற்றி காவியம் எழுத வந்தேனே. அது என் தலை விதி'' என்று கூறி உடனேயே தாம் கொண்டு வந்த பனை ஓலைகளில் ஒரு சிறு காவியம் எழுதி அவனிடம் கொடுத்து விட்டுப் போய்விட்டார்.

ஏழை அந்தக் காவியத்தைப் படித்துப் பார்த்தான். அதில் நூறு செய்யுள்கள் இருந்தன. எல்லாம் அவனைப் பற்றியதே. ஒவ்வொரு செய்யுளிலும் அவனது புகழே இருந்தது. அன்று முதல் அவன் இரவு வேளைகளில் தன் குடிசைக்கு எதிரே உள்ள மரத்தின் கீழ் உட்கார்ந்து ஒரு விளக்கை ஏற்றி வைத்துக் கொண்டு அவ்வழியே போவோர் வருவோரை எல்லாம் அழைத்து உட்கார வைத்து அந்தக் காவியத்தைப் படித்துக் காட்டி ''இந்தக் காவியம் யாரைப் பற்றி எழுதப்

பட்டது தெரியுமா? என்னைப் பற்றித் தான்'' என்று கூறி வரலானான்.

அதைக் கேட்டவர்களெல்லாம் ''இப்படி கவிதை புனையும் சக்தி படைத்த புலவர் போயும் போயும் உன்னைப் பற்றி காவியம் எழுத வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டார் என்றால் அவர் எவ்வளவு தரித்திரம் பிடித்தவர் என்பது தெரிகிறது அந்தக் கவிஞர் இந்தத் தாழ் நிலைக்குத் தள்ளப்படக் காரணமானவர் இந் நாட்டு மன்னரே'' எனக் கூறலாயினர்.

இதெல்லாம் மன்னனுக்கு அவ்வப்போது தெரிவிக்கப்பட்டது. ஒரு நாளிரவு மன்னன் மாறு வேடத்தில் சென்று அந்த ஏழை உட்கார்ந்திருந்த மரத்தின் கீழ் வேண்டுமென்றே விழுந்தான். ஆனால் அந்த ஏழை குத்துக் கல் போல உட்கார்ந்திருந்தானேயொழிய எழுந்து வந்து அவனைத் தூக்கிவிடவில்லை.

சற்று நேரத்திற்குப்பின் மன்னன் தானாகவே எழுந்து அந்த ஏழையிடம் போய் ''முன்பு ஒருமுறை உனக்கு ஆசி கூறினேன். நீ விரும்பியதும் நடந்தது. நீ எனக்கு இப்போது உதவி இருந்தால் இப்போதைய உன் விருப்பமும் நிறைவேற ஆசி கூறி இருப்பேன். நீ எனக்கு உதவாததால் ஒரு அரிய வாய்ப்பினை இழந்து விட்டாய்'' என்றான்.

ஏழையோ ''ஐயோ! உன் ஆசி என்றாலே எனக்குப் பயம்'' எனவே மன்னனும் ''ஏன் பயப்படுகிறாய்?'' என்று கேட்டான். ஏழையும் ''நான் தான் முட்டாள்த்தனமாக எதையோ விரும்பிக் கேட்டால் நீயாவது நல்ல



விதமாகச்சொல்லி நல்லதைக் கொடுத்திருக்கக் கூடாதா? ஒரு கவிஞன் வந்து என்னைப் பற்றி ஒரு காவியம் எழுதி விட்டால் என் வயிறு நிரம்பி விடுமா? இந்த காவியத்தை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வது? நாலு பேருக்குப் படித்துக் காட்டினால் அவர்கள் சிரிக்கிறார்கள். இதை எழுதிய கவிஞரையும் இந்நாட்டு மன்னனையும் திட்டுகிறார்கள். கவிஞரோ இப்படி ஒருகாவியம் எழுதியது தன்தலைவிதி என்று தன்னைத் தானே நொந்து கொண்டே சென்றார். உன் ஆசியால் யாருமே மகிழ்ச்சி அடையவில்லை'' என்றான்.

மன்னனும் ''இன்று நீ மகா புத்திசாலி போலப் பேசுகிறாயே. அன்று ஏன் இந்த புத்திசாலித்தனத்தை நீ காட்டவில்லை?'' என்று கேட்டான். ஏழையும் ''கடவுள் மனிதனுக்கு அறிவைக் கொடுத்தது எதற்கு? நல்லது எது கெட்டது எது என்று அறிந்து செயல் படத்தானே. மனிதன் மரணமோ, நோயோ, வலியோ வேண்டாம் என்கிறான். ஆனால் அவற்றைத் தவிர்க்க முடியாதே. மனிதனுக்குக் கடவுள் எல்லாம் கொடுக்கிறார். அவற்றில் தனக்கு சுகத்தையும் நன்மையையும் அளிப்பவை எவை என்று அவன் தன் அறிவைக் கொண்டு தேர்ந்தெடுக்க வேண்டும். நான்தான் அறிவுகெட்டு ஏதோ கேட்டால் நீ யாவது யோசித்து எனக்கு அறிவுரை கூறி நல்லதைச் செய்திருக்கலாம். ஆனால் நீ அவ்வாறு செய்யவில்லை. நீ செய்தது எனக்குத் கெடுதலே. இதனால் எனக்குப் பிறருக்கு உதவும் எண்ணமே இல்லாது போயிற்று'' என்றான்.

மன்னன் அப்போது ஒரு ஏழையின் கள்ளம் கபடமற்ற உள்ளத்தைக் கெடுத்து விட்டதற்காக மனம் வருந்தினான். அவன் அந்த ஏழை சுகமாக வாழ எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொடுத்தான். அன்று முதல் மன்னன் யார் எதைக் கேட்டாலும் அதைக் கொடுப்பதற்கு முன்பே யோசித்து அவர்களின் தேவை எது எனக் கண்டு அதை மட்டும் கொடுத்து வந்தான்.





# பேராசையின் விளைவு

விந்திய மலையைச் சுற்றிப் பல சிறு நாடுகள் இருந்தன. அவற்றில் ஒன்று மலயபுரி. அதன் மன்னன் மலயகேது இறக்கவே அவனது மகனான இருபது வயதான சந்திர கேது சிம்மாசனத்தில் அமர்ந்தான். அவன் அங்குள்ள சிறு நாடுகளைச் கைப்பற்றிதான் சக்கரவர்த்தி ஆகிவிட வேண்டுமென்று ஆசைப்பட்டான். ஆனால் அவனிடம் அதற்கான போதிய படை பலம் இல்லை.

சந்திரகேதுவின் எண்ணத்தை அறிந்து கொண்ட அவனது முதலமைச்சர் முக்தானந்தர் ''இந்த ஆசை வேண்டாம். நீங்கள் மணம் செய்து கொண்டு சுகமாக வாழ்ந்து இந்த நாட்டை ஆண்டு வருவதோடு திருப்தி அடையுங்கள்'' என்று சொல்லிப் பார்த்தார்.

சந்திரகேதுவோ ''நீங்கள் சொல்வது சரியல்ல. நான் நிறையப் பணம் சம்பாதித்து பெரும் படை திரட்டி இந்தச் சிறு மன்னர்களை எல்லாம் வென்று சக்கரவர்த்தியாவேன். அப்போது பல பெரிய மன்னர்கள் தம் புதல்விகளை எனக்குக் கொடுக்கப் போட்டி போட்டுக் கொண்டு முன் வருவார்கள்'' என்று இறுமாப்புடன் கூறினான்.

அவன் பணம் திரட்ட தன் படை வீரர்களை சிறு சிறு கூட்டங்களாகப் பிரித்து அண்டை நாடுகளின் எல்லைப் புறங்களிலுள்ள ஊர்களை தாக்கி அங்குள்ளவர்களின் பொருள்களை எல்லாம் கவர்ந்து வரும்படிக் கூறினான். அவர்களும் எல்லைப் புற கிராமங்களைத் தாக்கவே, அம்மக்கள் தம் அரசர்களிடம் அத்தாக்குதல்கள் பற்றி முறையிடலானார்கள்.

அம்மன்னர்களுக்கும் கொள்ளை அடிப்பவர்கள் மலயபுரியைச் சேர்ந்தவர்கள் என்று தெரிந்து விட்டது. மக்

—கி. சுதா—

களிடம் அவர்கள் தக்க பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்வதாகக் கூறி அனுப்பினார்கள். அந்த அரசர்களில் ஒருவனான வீரசிம்மன் என்பவன் தன் தூதனை சந்திரகேதுவிடம் அனுப்பி கொள்ளைக்காரர்கள் உங்கள் நாட்டிலிருந்து வருகிறார்கள் எனத் தெரிவிக்கவே சந்திரகேதுவும் ''எங்கள் நாட்டு எல்லைப் புறத்திலும் கொள்ளைகள் நடக்கின்றன. நாங்கள் அதனை அடக்குகிறோம் உங்கள் நாட்டிலும் நாம் செய்தது போல ஏற்பாடு செய்து கொண்டு அவர்களை அடக்குங்கள்'' என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டான்.

முதலமைச்சர் முக்தானந்தர் சந்திரகேதுவிடம் ''இது சரியல்ல! இந்த மன்னர்களெல்லாம் ஒன்று சேர்ந்து உங்களைத் தாக்கக் கூடும்'' என்றார். அவனோ சிரித்தவாறே ''இப்போது என்னிடம் போதிய பணம் சேர்ந்து விட்டது அவர்கள் ஒன்று சேர்வதற்குள் நான் படை திரட்டி எல்லா நாடுகளையும் வென்று விடுவேன்'' என்றான்.

இதற்குள் வீரசிம்மன் தன் படைகளோடு வந்து மலயபுரியை திடீரென்று தாக்கினான். அப்போது சந்திரகேதுவின் படை வீரர்கள் பிரிந்து பல இடங்களில் கொள்ளை அடிக்கச் சென்றிருந்ததால் சந்திரகேது தன் கோட்டையைக் காக்க முடியாமல் அங்கிருந்து ரகசிய சுரங்க வழியாக தன் முதலமைச்சரோடு தப்பி ஓடினான்.

அவன் தன் அமைச்சரிடம் ''இனி நாம் என்ன செய்யலாம்?'' என்று கேட்டான். அதற்கு முக்தானந்தர் ''இப்போது நீங்கள் அரசரும் அல்ல. நான் உங்கள் மந்திரியும் அல்ல. நீங்கள் கொள்ளை அடிக்கப் போய் உங்கள் நாட்டையே இழந்து விட்டதோடு நில்லாமல் உங்கள் உயிருக்கே ஆபத்தையும் வரவழைத்து கொண்டு விட்டீர்கள். நீங்கள் எங்காவது ஓடுங்கள்'' என்றார்.

சந்திரகேதுவும் ஓடி மலைக் காடுகளில் மறைந்து வாழ வேண்டியதாயிற்று.






# 7

(ரூபதரன் தன் உடலோடு சொர்க்கலோகம் சென்றுதன் பித்ரு தேவதைகளைக் கண்டான். அங்கு சாங்கேதகன் என்ற பேரறிஞனைக் கண்டு தனக்கு எதிர்காலத்தில் வரப்போகும் இன்னல்கள் பற்றித் தெரிந்து கொண்டு பூவுலகிற்கு வந்து தன் ஆட்களோடு சேர்ந்து தன் நாட்டிற்குத் திரும்பலானான். வழியில் நாக கன்னிகைகளிடமிருந்து தப்பி சூரியபகவானின் மாட்டு மந்தைகளுள்ள தீவை அடைந்தான். அங்கு யாரும் எந்த மிருகத்தையும் கொள்வதில்லை எனச் சத்தியம் வாங்கிய பிறகே அவன் எல்லோரையும் அத்தீவில் இறங்க அனுமதித்தான். அதன் பிறகு–)

கிரேக்கர்கள் தம் கப்பலைத் துறைமுகம் போன்ற ஓரிடத்தில் அத்தீவில் நிறுத்தினார்கள். எல்லோரும் கரை இறங்கி சமையல் செய்து சாப்பிட்டார்கள். அவர்கள் தம் இறந்த நண்பர்களைப் பற்றிப் பேசியவாறே இருக்க இரவு வந்தது.

அப்போது பயங்கரக் காற்று வீசலாயிற்று. வானில் கருமேகங்கள் சூழ்ந்தன. கிரேக்கர்கள் தம் கப்பலை இழுந்து பத்திரமாக ஒரு குகைப் பக்கம் கட்டி வைத்தார்கள். ரூபதரனும் ''நண்பர்களே! நம் கப்பலில் நமக்கு வேண்டிய உணவு ஏராளமாக உள்ளது. அதனால் இத்தீவிலுள்ள ஆடுமாடுகள் எதையும் தொடக் கூடாது. அவை சூரிய பகவானுடையவை. அவற்றைக் கொன்றால் அவரது கோபத்திற்கு ஆளாவோம். எனவே ஜாக்கிரதை'' என்று எச்சரித்தான்.



என்று தன் ஆட்களிடம் கூறினான். பிறகு அவன் தன் ஆட்களிடமிருந்து விலகி வெகுதூரம் போய் ஒரு அமைதியான இடத்தில் அமர்ந்து தியானம் செய்யலானான்.

அப்போது குகையிலிருந்த கிரேக்கர்களிடம் மாயாவி ''நண்பர்களே! நம் அவல நிலையைப் பாருங்கள். நான் சொல்வதைக் கேளுங்கள். மனிதன் என்றாவது இறக்க வேண்டும். ஆனால் நாம் இப்படிப் பட்டினி கிடந்தா சாக வேண்டும்? இங்கே கண் முன் கொழுத்த ஆடு மாடுகள் திரிகின்றன. அவற்றைப் பிடித்து தேவதைகளுக்குப் பலியிட்டு நாம் தின்போம். பசி தீர்ந்து விட்டால் சந்தோஷமாக இறக்கக் கூடத் தயாராகலாம். ஏன் தினமும் உடல் மெலிந்து போய் ஒரு நாள் சாக வேண்டும்? ஒருவேளை இந்த நிலையிலேயே நாம் இங்கிருந்து கிளம்பினாலும் நடுக்கடலில் சாக மாட்டோம் என்பது என்ன நிச்சயம்? என்று கூறினான்.

அதைக் கேட்ட மற்றவர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்து ''ஆமாம். நீ சொல்வது சரியே. நம் கண் முன் நல்ல ஆகாரம் இருக்கும் போது நாம் ஏன் பட்டினியால் வாடி சாக வேண்டும்? வயிறு நிறையச் சாப்பிட்ட பின் சூரிய தேவனின் கோபத்திற்கு ஆளாகி நாம் இறந்தாலும் கவலை இல்லை. என்றாவது ஒருநாள் நாம் இறக்க வேண்டும்'' என்றார்கள். அது மட்டுமல்ல, உடனேயே அவர்கள் கிளம்பிப்

அவர்களும் அவற்றிற்கு எவ்விதத் தீங்கும் இழைப்பதில்லை என்று மீண்டும் உறுதி கூறினார்கள். ஒருமாத காலமாகியும் பயங்கரக் காற்று அடங்கவில்லை. கப்பலிலிருந்த பானங்களும் உணவுப் பொருள்களும் தீர்ந்து போயின. கிரேக்கர்கள் தாம் சாப்பிடப் பறவைகளைத்தான் கொல்ல வேண்டியதாயிற்று. மீன்களைப் பிடிக்க வேண்டியதாயிற்று.

இதைக் கண்டு ரூபதரன் தேவதைகளைப் பிரார்த்திக்க எண்ணி ''நீங்கள் நான் கூறியபடி இங்குள்ள ஆடு மாடுகளுக்கு எவ்விதத் தீங்கும் இழைக்காமல் இருங்கள். நான் தேவதைகளை வேண்டி நம் உணவிற்கு ஏதாவது வழி செய்யும்படிக் கேட்டு வருகிறேன்''

போய் கொழுத்த ஆடு, மாடுகளாகப் பார்த்துப் பிடித்து தேவதைகளுக்குப் பலியிட்டுப் பின்னர் அவற்றின் மாமிசத்தை உண்டார்கள்.

ரூபதரன் தன் பிரார்த்தனையை முடித்துக் கொண்டு தன் ஆட்களிலிருந்த இடத்திற்குச் சென்றான். அவன் சற்று தூரத்திலிருந்தே தன் ஆட்கள் மாமிசத்தைச் சமைத்து உண்பதைப் பார்த்து விட்டான். தன் ஆட்கள் தனக்குக் கொடுத்த வாக்கை மீறி சூரிய பகவானுக்கு அபசாரம் செய்து விட்டார்களே என்று அவன் மனம் புழுங்கினான்.

அவன் அவர்களை மிகவும் கடிந்து கொண்டான். ஆனால் என்ன பயன்? எது நடக்கக் கூடாதோ அது நடந்து விட்டது. அது பற்றி நினைத்து வருந்துவதால் என்ன கிடைத்துவிடப் போகிறது?

கிரேக்கர்கள்தாம் கொன்ற ஆடு, மாடுகளின் மாமிசத்தை ஒரு வார காலம் உண்டார்கள். எட்டாவது நாள் காற்றின் வேகமும் அடங்கியது. உடனே ரூபதரனும் அவனது ஆட்களும் கப்பலை அவிழ்த்து விட்டு கடலுக்குக் கொண்டு போய் அதில் ஏறிக் கொண்டார்கள்.

சற்று நேரத்தில் அவர்கள் அத்தீவை விட்டு வெகு தூரம் போய் விட்டார்கள். எங்கு பார்த்தாலும் கடலையும் வானத்தையும் தவிர வேறு எதுவும் அவர்களுக்குத் தென்படவில்லை. அப்போது திடீரென நடுவானத்தில்



ஒரு கரிய மேகம் தோன்றியது. மேற்கு திசையிலிருந்து பயங்கரச் சூறாவளிக் காற்று வீசியது.

அதன் வேகத்தில் கப்பலின் பாய்கள் கிழிந்து போயின. பாய் மரமே ஒடிந்து சுக்கானின் மீது விழவே சுக்கானே உடைந்து சிதறித் துண்டு துண்டாகியது. சுக்கானை இயக்கிக் கொண்டிருந்தவனும் படுகாயமுற்றுக் கடலில் விழுந்து இறந்தான். அப்போது ஒரு இடியே அக்கப்பலின் மீது விழுந்தது. கப்பல் பல துண்டுகளாக உடைய, அதிலிருந்தவர்களெல்லாம் கடலில் விழுந்து முழுகலானார்கள்.

ரூபதரனுக்கு பாய் மரத்துண்டு கிடைத்தது. அதைப் பிடித்துக் கொண்டு நீந்தியவாறே கடலில் அவன்



போய்க் கொண்டிருந்தான். அவன் தான் நீர்ச்சுழலை நோக்கிச் சென்று கொண்டிருப்பதையும் வித்வம்சினியின் தீவை அடையப் போவதையும் கண்டு இனி தனக்கு மரணமே என அவன் எண்ணினான்.

ஆனால் அவனது அதிர்ஷ்டம் அந்த மரக்கட்டை அவனை அப்பகுதிகளுக்குக் கொண்டு செல்லாமல் வேறு எங்கோ இழுத்துப் போயிற்று.

அவன் இவ்வாறு ஒன்பது நாட்கள் கடலிலே போய் பத்தாவது நாள் ஒகிஜாவா என்ற தீவை அடைந்தான். அத்தீவில் சம்மோகினி என்ற தேவதை வசித்து வந்தாள். அவள் வசித்த குகை முன் அழகிய பூந்தோட்டம் இருந்தது பல மலர்ச் செடிகளும் கொடிகளும் இருந்தன. குகையின் வாசலில் திராட்சைக் கொடியும் அதில் திராட்சைக் கொத்துக்களும் தொங்கிக் கொண்டிருந்தன.

ரூபதரன் அத் தீவில் இறங்கி உள்ளே நடந்து செல்கையில் சம்மோகினி அவன் எதிரே வந்து வரவேற்று அவனைத் தன் குகைக்குள் அழைத்துச் சென்றாள். அவனுக்குக் குடிக்கப் பானம் கொடுத்து அவள் ''நீ இங்கேயே என் கணவனாக இருந்துவிடு, உனக்குக் கிழத்தனமும் நோயும், மரணமும் வராமல் செய்து விடுகிறேன்'' என்றாள்.

ரூபதரனுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. சம்மோகினி சொல்வதை ஏற்று நடப்பதா அல்லது மறுத்து விடுவதா? ஏற்றால் ஏற்படும் கஷ்டங்களை விட மறுத்தால் என்னென்ன கஷ்டங்களை அனுபவிக்க வேண்டி வருமோ?

அவனுக்கு வேறு வழி எது? அவளது விருப்பப்படியே அவன் அவளை மணந்து கொண்டு ஐந்து ஆண்டுகளை அவன் கழித்து விட்டான். ஆனால் அவனது மனதிலோ தன் நாட்டிற்குப் போய்விட வேண்டுமென்ற ஆசை நாளுக்குநாள் அதிகரிக்கலாயிற்று.

சம்மோகினி அவனது ஆசையை இனித்தடுக்க முடியாது என அறிந்து கொண்டாள். ஒருநாள் அவளே ''உன் நிலையைக் காண என்னால் சகிக்க முடியவில்லை. உன்னை உன் நாட்டிற்கே அனுப்பி விடத் தீர்மானித்து

விட்டேன். நீ மரத்தை வெட்டி ஒரு படகைத்தயாரித்துக்கொள். உனக்குத் தேவைப்படும் உணவையும் கொடுக்கிறேன். துணி மணிகள் கொடுக்கிறேன். காற்றும் உனக்கு அனுகூலமாக வீசும்படிச் செய்கிறேன். இவற்றோடு நீ சௌக்கியமாக உன் நாட்டிற்குப் போகலாம்'' என்றாள்.

அதைக் கேட்ட ரூபதரனின் மனம் சந்தேகம் கொண்டது. அவன் ''இதில் ஏதோ சூது உள்ளது. ஒரு சிறு படகைக் கொண்டு மாபெரும் கடலில் சென்று என் நாட்டை அடைய முடியுமா? நீ மனப்பூர்வமாகத்தான் இதைச் சொல்கிறாயா? என்னால் நம்ப முடியவில்லையே'' என்றான்.

அவளோ ''நீ வீண் சந்தேகம் படுகிறாய். உன் நிலை கண்டு என் மனம் இளகிவிட்டது. நீதாராளமாகக்கிளம்பிச்செல்லலாம். ஆனால் வழியில் எவ்வளவு கஷ்டங்கள் உள்ளன என்பது உனக்குத் தெரிந்தால் நீயே இங்கிருந்து போக விரும்ப மாட்டாய்'' என்றாள்.

ரூபதரனும் ''நான் இதுவரை எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்து விட்டேன். அவற்றோடு இனிமேல் வரும் கஷ்டங்களையும் சகித்துக் கொள்கிறேன். எனவே நீகூறியபடியே ஒரு படகைத் தயாரித்துக் கொண்டு இங்கிருந்து என் நாட்டிற்குச் செல்கிறேன். அதற்கான ஏற்பாடுகளை இப்போதே செய்கிறேன்'' என்றான். சம்மோகினியும் அவனுக்கு நல்ல



விருந்தளித்து அவனுக்கு இரு புறமும் கூராக உள்ள ஒரு கோடாலியையும் கொடுத்தாள்.

மறுநாள் அவள் அவனை மரங்கள் அடர்ந்துள்ள பகுதிக்கு அழைத்துச் சென்றாள். ரூபதரனும் இருபது மரங்களை வெட்டி சீராக்கி அவற்றைக் கொண்டு ஒரு சிறிய ஓடத்தைத் தயாரித்தான். அதற்கு பாய் மரக் கம்பம் நிறுத்திப் பாய்களைக் கட்டினான். அந்த ஓடத்தில் ஒரு சிறு சுக்கானையும் பொருத்தினான். பிறகு அதை அவன் கடற்கரையில் கொண்டு போய் நிறுத்தினான்.

இவற்றைச் செய்து முடிக்க நான்கு நாட்களாகின. சம்மோகினி அவனது பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்



வதிலும் கரு மேகங்கள் சூழ்ந்தன. காற்றின் வேகம் அதிகரித்ததால் இனி தான் இறக்கத்தான் போகிறோம் என எண்ணினான்.

அவன் தன் மனதில் ''நான் தான் எவ்வளவு துரதிர்ஷ்டசாலி? என் நண்பர்களைப் போல ட்ராய்ப் போரில் இறந்திருந்தால் கூட எனக்கு தகனக் கிரியை செய்திருப்பார்களே. இப்போது நான் ஒரு அநாதை போல சாக வேண்டி இருக்கிறதே'' என்று எண்ணிக் கண்ணீர் வடிக்கலானான். அதற்கு ஏற்ப சுக்கான் உடைய அதன் பிடிப்பு அவன் கையிலிருந்து நழுவியது. ஓடமும் 'கிர் கிர்' என்று சுற்றலாயிற்று. அவன் அதிலிருந்து கடலில் போய் விழுந்தான்.

எப்படியோ நீந்தி சமாளித்து அவன் தன் ஓடத்தைப் பற்றி அதனுள் ஏறி உட்கார்ந்தான், அப்போது ரட்சகி என்ற தேவதை பறவையின் உருவில் வந்து ''ரூபதரா! உன் உயிருக்கு எவ்வித ஆபத்தும் இல்லை. உனக்கு கஷ்டங்கள் இருக்கும். நீ உன் நாட்டையும் அடைவாய். ஆனால் அதற்கு இந்த ஓடம் பயன்படாது. நான் ஒரு ஆடை அளிக்கிறேன். அதை நீ மார்பில் சுற்றிக் கொண்டு நீரில் குதித்தால் கடலில் முழுகாமல் தப்பிச் செல்லலாம். கரையையும் அடைவாய்'' என்று கூறி ஒரு ஆடையைக் கொடுத்தது.

ரூபதரனுக்கோ அதில் சற்றும் நம்பிக்கை ஏற்படவில்லை. அதனால் அவன் ஓடத்தை உறுதியாகப் பற்றிக்

தாள். உணவு, உடைகள் எல்லாம் அந்த ஓடத்தில் வைக்கப்பட்டன. குடிக்க நீரும், பானங்களும் வைக்கப்பட்டன. ரூபதரனும் சிறிய கப்பல் போலிருந்த அந்த ஓடத்தில் ஏறி உட்கார்ந்து சுக்கானைப் பிடித்துக் கொண்டான்.

காற்று மெதுவாக அவனுக்கு அனுகூலமாக வீசியது. ஓடம் நகரலாயிற்று. அப்போது சம்மோகிணி அவனிடம் ''ஓடத்தை சப்த ரிஷி மண்டலத்திற்கு இடது புறமாகவே ஓட்டிச் செல்'' எனக் கூறி வழியனுப்பி வைத்தாள்.

ரூபதரன் கடலில் சென்று கொண்டே இருந்தான். பதினைந்து நாட்கள் கழிந்தன. பதினாறாவது நாள் பெருத்த புயல் அடித்தது. வானம் முழு

கொண்டு உட்கார்ந்து கொண்டான். ஆனால் சற்று நேரத்தில் ஒரு அலை அடித்து அவனது ஓடத்தைத் துண்டு களாக்கி விட்டது. அவனுக்கு ஒரு மரக் கட்டை மட்டுமே கிடைக்க அதன் மீது ஏறி உட்கார்ந்து ரட்சகி கொடுத்த ஆடையை மார்பில் சுற்றிக் கொண் டான். பிறகு நீரில் குதித்து நீந்திச் சென்றான்.

அவ்வாறு இரண்டு நாட்கள் நீந்தி மூன்றாவது நாள் ஒரு கடற்கரையைக் கண்டான். அவன் அதை நோக்கிச் சென்ற போது அங்கு கூரான பாறைகள் நீட்டிக் கொண்டிருப்பதைக் கண்டு திகைத்தான். இதே சமயம் ஒரு அலை அடிக்கவே அவன் அப்பாறையில் மோதித்தான் இறக்கத் தான் வேண்டும் என எண்ணிக் கண்களை இறுக மூடிக் கொண்டான். ஆனால் அவன் எதிர் பார்த்தபடி அலை அவனைப் பாறைக் குக் கொண்டு போய் மோதவில்லை. அவனை அலை சற்று தூரமே கொண்டு சென்றது. ஆனால் அதற்குள் வேறொரு அலை வந்து அவனைப் பாறையிலிருந்து அப்புறமாக இழுத் துச் சென்றது.

ரூபதரனுக்குப் போன உயிர் திரும்பி வந்தது போலாயிற்று. கடவுள் தனக்கு மேலும் ஆயுளை அளித்திருப் பதையும் தான் இறப்பதை விரும்ப வில்லை என்பதனை நினைத்து அவன் அவரை மனமாரத் துதித்தான். தனக்கு இனி வரும் இன்னல்களையும் இது போலவே போக்கி விடும்படி வேண் டினான். அப்பாறைகளிலிருந்து வில கிச் சென்ற அவன் சுற்றிலும் பார்த்து எங்கு போவது எனத் தீர்மானித்துக் கொண்டான்.

ரூபதரன் அந்தக் கடற்கரையை நோக்கி நீந்திச் செல்லாமல் சற்று தூரம் போய் சுற்றிச் சென்றான். சற்று நேரத் தில் ஒரு ஆறு கடலில் கலக்கும் இடம் வந்தது. அவன் அங்கு நீந்திச் சென்று கரையை அடைந்து எழுந்து நின்றான். களைப்பு மேலிட்டு நிற்க முடியாமல் அவன் தன் நினைவை இழந்து அங்கே விழுந்து விட்டான்.

—(தொடரும்)



# இப்படியல்ல, அப்படி!

சூலூரிருந்து ஏதோ ஒரு அவசர வேலையாக சுந்தரராமன் தன் குதிரை வண்டியில் கோவைக்குப் போய் கொண்டிருந்தான். சூலூரிலிருந்து இரண்டு மைல் தூரம் போனதும் பாதை ஓரத்தில் பத்து வயதுச் சிறுவன் ஒருவன் கவலை தோய்ந்த முகத்தோடு மிரள மிரள விழித்துக் கொண்டு நிற்பதை அவன் கண்டான்.

சுந்தரராமன் தன் வண்டியை நிறுத்தி அச்சிறுவனிடம் ''தம்பி! எங்கே நீ போக வேண்டும்?'' என்று கேட்க அவனும் ''என் ஊருக்குத்தான். அது இங்கிருந்து இரண்டு மைல் தூரமாயிற்றே!'' என்றான். அப்போது சுந்தரராமன் ''கவலைப்படாதே. என் வண்டியில் ஏறிக் கொள். நான் கொண்டுபோய் விடுகிறேன்'' என்றான். சிறுவனும் வண்டியில் ஏறி உட்கார்ந்து கொள்ள சுந்தரராமன் வண்டியை ஓட்டிச் சென்றான்.

இரண்டு மைல் தூரம் சென்றதும் அவன் சிறுவனிடம் ''இங்கேதானே உன் ஊர்? இரண்டு மைல் வந்தாகி விட்டது'' என்றான். அப்போது சிறுவன் ''இப்போது என் ஊருக்கு இங்கிருந்து நான்கு மைல் தூரம். என் ஊர் சூலூரல்லவா? அங்கே வண்டி போகாமல் நேர் எதிர் திசையில் போய்க் கொண்டிருக்கிறது. அதனால்தான் நான்கு மைலாகி விட்டது'' என்றான்.

அதைக் கேட்டு சுந்தரராமன் திகைத்துப் போனான்!






# வாக்கு தவறினாள்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச்சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நடு நிசியில் இப்படி சிரமப்படுவதைப் பார்த்தால் நீ யாருக்கோ ஏதோ வாக்குறுதி கொடுத்திருக்கிறாய் என்பது தெரிகிறது. வாக்குறுதி கொடுப்பது எளிது. ஆனால் அதைக் காப்பது கடினம். இதை விளக்க உனக்கு ராணி ரத்தினாவளியின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பிததது.

மங்களபுர மன்னன் மந்தஹாசன். அவன் மனைவி ரத்தினாவளி. ரத்தினாவளி சிறு குழந்தையாக இருந்த போதிருந்தே மந்தஹாசனின் தாய்

## வேதாளம் சொல்லும் கதை




அவளைத் தன் மகளோடு சேர்த்து வளர்த்து வந்தாள். அவள் விருப்பம் ரத்தினாவளியை மந்தஹாசனுக்கு மணம் செய்து வைக்க வேண்டும் என்பதே.

மந்தஹாசனும் ரத்தினாவளியும் ஒன்றாகவே ஒருவர் மீது மற்றவர் அன்பு கொண்டு வளர்ந்து வந்தார்கள். அவர்கள் விவாக வயதை அடைந்த போது மந்தஹாசனின் தாயார் அவர்களது விவாகம் பற்றிப் பேச்சு எடுக்கவே, ரத்தினாவளி தயங்கினாள். ஏனென்றால் மந்தஹாசன் நன்கு வளர்ந்து மிக மிக அழகாக இருந்தான். ரத்தினாவளியோ அழகு குறைந்தும், நிறத்திலும் சற்று மட்டமாகவும் இருந்தாள். அதனால் அவள் தான் மந்தஹாசனை மணப்பது சரியா என்று யோசிக்கலானாள்.

ரத்தினாவளியை மந்தஹாசனுக்கு அவனது தாய் மணம் செய்து வைக்கப் போவதாக அவளது தோழிகள் அறிந்ததும் அவர்கள் அவளிடம் ''ரத்தினா! இப்போது தன் தாயார் சொல்கிறாளே என்பதற்காக அவர் உன்னை மணந்து கொண்டு விடலாம். ஆனால் மிக அழகாக உள்ள உன் கணவரை இன்னொரு பெண்ணோ ஒரு கந்தர்வப் பெண்ணோ மணந்து கொள்ள மாட்டாள் என்பது என்ன நிச்சயம்?'' என்று ஒரு பிரச்னையைக் கிளப்பினார்கள்.

இதைக் கேட்ட ரத்தினாவளியும் நன்கு யோசித்தாள். ஒருநாள் அவள் மந்தஹாசனிடம் ''நான் உங்களை மணக்கக் தகுதி பெற்றவள் அல்ல. நீங்கள் உங்கள் அழகிற்கு ஏற்ப அழகிய பெண்ணைத் தேர்ந்தெடுத்து மணந்து கொள்ளுங்கள்'' என்று கூறினாள்.

மந்தஹாசனோ அதைக் கேட்டு பலமாகச் சிரித்து ''ரத்தினா! வீணாக என்னென்னவோ எண்ணி மனதைக் குழப்பிக் கொள்ளாதே. நான் உன்னைத் தவிர யாரையும் மணக்கப் போவதில்லை. உன்னைத்தவிர வேறு யாரும் எனக்கு மனைவியாகப் போவதில்லை'' என்று கூறினான்.

அது கேட்டு ரத்தினாவளி மகிழ்ந்து போனாள். விரைவிலேயே அவர்களது திருமணமும் நடைபெற்றது.

அவர்களது இல்வாழ்க்கையும் ஆனந்த மாகக் கழிந்து கொண்டிருந்தது. ஆனால் மணமாகி சில ஆண்டுகளாகி யும் அவர்களுக்குக் குழந்தை பிறக்காத தால் ரத்தினாவளி மிகவும் கவலைப் படலானாள்.

ஒரு பௌர்ணமி நிலவில் ரத்தினா வளி தன் கணவனுடன் ஆற்றில் ஒரு படகில் உல்லாசமாகப் போய்க் கொண்டிருந்தாள். அச்சமயம் சந்திர காந்தா என்ற கந்தர்வப் பெண் ஆகாய வழியே சென்று கொண்டிருந்தாள். அவள் மந்தஹாசனையும் ரத்தினா வளியையும் பார்த்தாள்.



சந்திகாந்தா கந்தர்வலோகத்தில் மகா அழகி எனப் பெயர் பெற்றவள். அவள் கந்தர்வலோகத்தில் தான் மணக்கத் தக்கவன் யாருமே இல்லை எனக் கர்வமாகக் கூறி வந்தாள். அவள் மந்தஹாசனைக்கண்டதும் அவனைத் தன் கணவனாக அடைவது என்று எண்ணி அவ்விருவர் கண்களுக்குப் புலப்படாமல் அவர்களோடு இருந்து அவர்கள் தமக்குக் குழந்தை இல்லாத குறை பற்றிப் பேசிக் கொள்வதைக் கேட்டாள். அதன் பிறகு அவள் அப் போது கந்தர்வ லோகத்திற்குச் சென் றாள்.

ஆனால் மறுநாள் மந்தஹாசன் தனிமையில் பூங்காவில் இருந்த போது சந்திரகாந்தா அவனைக் கண்டு ''நான் கந்தர்வப் பெண். கந்தர்வ லோகத்து அழகி என்று பெயர் பெற்ற வள். என் அழகிற்கு ஏற்றவன் கந்தர்வ லோகத்திலேயே இல்லை. நேற்று நீயும் உன் மனைவியும் படகில் போய்க் கொண்டிருப்பதைக் கண் டேன். உன்னைக் கண்டது முதல் உன்னையே மணக்க என் மனம் துடிக் கிறது. எனவே என்னை நீ மணந்து கொள்'' என்று வேண்டினாள். மந்த ஹாசன் அவளது அழகைக் கண்டு ஆச் சரியப்பட்டாலும் அவளது வேண்டு கோளை நிராகரித்து விட்டான்.

இதனால் சந்திரகாந்தா மனம் தளர்ந்து போய் விடவில்லை. அவள் தனிமையிலிருந்த ரத்தினாவளியைக் கண்டு மந்தஹாசன் தன்னை மணக்க மறுத்ததைக் கூறி ''அவன் உன்னைத் தான் மிகவும் விரும்புகிறான். மிக அழகாக உள்ள கந்தர்வப் பெண்ணான



நான் வேண்டியும் அவன் என்னை மணக்கச் சம்மதிக்கவில்லை. அழகு பற்றி ஒருபுறம் இருக்கட்டும். உங்கள் இருவருக்கும் ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லையே. இது பற்றியாவது நீ யோசித்துப் பார்த்தாயா?'' என்று கேட்டாள்.

அது கேட்டு ரத்தினாவளி மனவருத்தப்பட்டாளாயினும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் ''ஆமாம். இதையெல்லாம் நீ எதற்காக என்னிடம் கூறுகிறாய்?'' என்று கேட்டாள்.

சந்திரகாந்தாவும் ''எல்லாம் ஒரு காரணமாகத்தான் கூறுகிறேன். நீ உன் கணவன் சுகமாக இருக்க வேண்டுமென்று தன் நலம் கருதாமல் இருக்கிறாய் என்பது உண்மையானால் நீ உன் கணவனிடம் என்னை மணந்து கொள்ளும்படிக் கூற வேண்டும். ஒரே வருடத்துள் எனக்கும் அவருக்கும் ஒரு குழந்தை பிறக்கும். அவர் என்னுடன் சுகமாக இருக்கலாம். என்னை அவர் மணந்து கொண்டாலும் அவர் உன்னை உதாசீனப்படுத்த மாட்டார். நீ சுயநலமில்லாமல் அவரது நலனையே கருதுவதற்காகவும் அவர் உன்னைப் பாராட்டுவார். இது பற்றி நன்கு யோசித்துப் பார்'' என்றாள்.

ரத்தினாவளியும் சற்று யோசித்து விட்டு ''இதற்கு ஒரு நிபந்தனையின் பேரில் நான் சம்மதிக்கிறேன். இன்று சித்திரை மாத கிருஷ்ண பட்சப் பஞ்சமி. இன்றிலிருந்து சரியாக ஒரு வருட கால அவகாசம் எனக்குக் கொடு. அடுத்த ஆண்டு சித்திரை மாத கிருஷ்ண பட்சப் பஞ்சமிக்குள் நான் தாயாக ஆகாவிட்டால் என் கணவர் உன்னை மணந்து கொள்வதற்கான முயற்சிகளை மேற்கொள்கிறேன். இது நான் கொடுக்கும் வாக்குறுதி'' என்றாள்.

சந்திரகாந்தாவும் அதற்குச் சம்மதித்து விட்டு அங்கிருந்து சென்றாள். அதற்கு மறுநாள் ரத்தினாவளி கோவிலுக்குப் போய் அம்பிகையை தரிசித்து விட்டுத் திரும்பிவரும் போது அக்கோவிலில் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்த ஒரு சாது அவளை தன்னருகே அழைத்து'' பெண்ணே! நீ உனக்குத் குழந்தை பிறக்கவில்லையே என்று தானே கவலைப்படுகிறாய்?'' என்று

கேட்டார். அவளும் 'ஆம்' என்று கூறவே அவரும் ''எங்கே, உன் கையைக் காட்டு'' என்றார். அவளும் தன் இடது கையை நீட்டவே அவர் அதன் ரேகைகளைப் பார்த்து விட்டு ''உன் கையில் சந்தான ரேகை என்பதே இல்லையே. ஆனாலும் உன் எதிர் காலம் ஒளி மயமாக இருக்கும் நீ ஒரு வேலை செய்வாயா?'' என்று கேட்டார்.

அவளும் ''நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்கவே அவரும் ''இந்நாட்டின் வடதிசையில் மந்தரமலைத் தொடர் உள்ளது. அதன் நடுவே செல்லும் கணவாய் வழியே போனால் மலையின் மறுபுறம் சிவபாதர் என்று மகானின் ஆசிரமம் உள்ளது. நீயும் உன் கணவரும் சித்திரா பௌர்ணமியன்று அதிகாலையில் அவரை கண்டு சிருங்கர் என்பவர் உங்களை அவரிடம் அனுப்பியதாகக் கூறினால் அவர் உங்களுக்கு ஏதாவது வழி கூறுவார்'' என்றார்.

அவளும் ''சுவாமி! தாங்கள் கூறிய படியே செய்கிறோம்'' என்று கூறி அவரை வணங்கி விட்டுச் சென்றாள். அன்றிரவு ரத்தினாவளி தன் கணவனிடம் சாது கூறியதைச் சொல்லி. ''இதையும் கடைசி முயற்சி என்று பார்த்து விடலாம். ஒருவேளை அந்த மகானின் அருளால் நமக்கு சந்தான பாக்கியம் கிடைத்தாலும் கிடைக்கலாம். எனக்காக நீங்கள் கொஞ்சம் சிரமப்பட வேண்டும்'' என்றாள். மந்தஹாசனும்



''ரத்தினா! நாம் இருவரும் கணவன் மனைவியர். சுகதுக்கங்களைச் சமமாகப் பகிர்ந்து கொள்ள வேண்டியவர்கள். இதுவரை இப்படித்தான் இருந்தோம். இனியும் இப்படியே இருப்போம்'' என்றான்.

சாது கூறியபடியே ரத்தினாவளியும் மந்தஹாசனும் மந்திர மலைக் கணவாய் வழியே சென்று சிவபாதரின் ஆசிரமத்தை அடைந்தார்கள். சித்திரா பௌர்ணமியன்று காலையில் அவர்கள் அவரை தரிசித்து சிருங்கர் என்பவர் அவர்களை அனுப்பியதாகக் கூறினார்கள்.

சிவபாதரும் அவர்களிடம் கனிவுடன் பேசி அவர்களது பிரச்னையைத் தெரிந்து கொண்டார். பிறகு



அவர் மந்தஹாசனிடம் அவனது
வலது கையை நீட்டச் சொல்லி அதன்
ரேகைகளைப் பார்த்தார். சற்று நேர
மானதும் அவர் ''உன் கையிலும் சந்
தான ரேகை என்பது இல்லை. அத
னால் எதாவது ஒரு அற்புதம் நிகழ்ந்
தால்தான் உங்களுக்குக் குழந்தை
பிறக்க வழி உண்டு'' என்றார்.

அது கேட்டு ரத்தினாவளியும் மந்த
ஹாசனும் ''அற்புதம் நிகழ வேண்
டுமா? அது எப்படி?'' என்று ஆச்சரி
யப்பட்டுக் கேட்டார்கள் சிவபாதரும்
''ஆமாம். நான் சொல்வதைக் கேளுங்
கள். இங்கிருந்து மூன்று யோசனை
தூரத்தில் மிகப் பழமையான சிவால
யம் ஒன்று உள்ளது. அதில் மிகப்
பழைய மாமரம் ஒன்று இருக்கிறது.
அது ஒரு வருடத்திற்கு ஒரு பழம்தான்
கொடுக்கும். பய பக்தியுடனும் அந்த
ரங்க சுத்தியுடன் இருந்து ஒருவன்தான்
அடைய வேண்டியதை நினைத்துக்
கொண்டு அந்தப் பழத்தைத் தன்
துண்டில் பிடித்துக் கொள்ள அந்த
மரத்தின் கீழ் நிற்க வேண்டும். அவன்
நேர்மையானவன் என்றால் அந்தப்
பழம் அவன் பிடித்திருக்கும் துண்டில்
தானே வந்து விழும். அவன் நேர்மை
யற்றவன் என்றால் பழம் தரையில்
விழுந்து விடும். தரையில் விழுந்த அந்
தப் பழத்தை எடுத்துத் தின்றால் எவ்
விதப் பலனும் கிடைக்காது. துண்டில்
விழுந்த பழத்தை எடுத்துச் சாப்பிட்
டாலே மனதில் எண்ணியது நடக்கும்.
இன்றிரவு சந்திரோதயம் ஆகும் போது
நீங்கள் அந்த மரத்தடியே போய் நில்
லுங்கள். மந்தஹாசன் தன் அங்கவஸ்
திரித்தை விரித்து நிற்கட்டும். ரத்தினா
வளி தன் புடவையின் தலைப்பை
விரித்து பிடித்துக் கொண்டு நிற்கட்
டும். யாருக்குப் பழம் கிடைக்கிறதோ
பார்க்கலாம்'' என்றார்.

அப்போது ரத்தினாவளி ''சுவாமி!
நான் விரும்புவதெல்லாம் எனக்கு
ஒரு குழந்தை பிறக்க வேண்டும் என்
பதே'' என்றாள். அது கேட்டு சிவ
பாதர் ''தர்ம சூட்சுமத்தை யார் அறி
வார்? எல்லாம் அந்த பகவானின்
செயல். அவன் இஷ்டப்படிதான் எது
வும் நடக்கும்'' என்று சிரித்துக்
கொண்டே கூறினார்.

ரத்தினாவளியும் மந்தஹாசனும்

சிவபாதரிடம் விடை பெற்றுக் கொண்டு சந்திரோதயம் ஆவதற்கு முன் அந்த சிவாலயத்தை அடைந்தார்கள். அவர்கள் அங்கிருந்த பழைய மாமரத்தடியே நின்றார்கள். மந்தஹாசன்தன் அங்கவஸ்திரத்தை விரித்துப் பிடித்துக் கொண்டும் ரத்தினாவளி தன் புடவைத் தலைப்பை விரித்துப் பிடித்துக் கொண்டும் நின்றனர்.

சந்திரோதயம் ஆயிற்று மரத்திலிருந்த மாம்பழம் மெதுவாகக் கீழே சாய்ந்து வரலாயிற்று. அது நேராக மந்தஹாசனின் அங்கவஸ்திரத்தில் வந்து விழுந்தது. அது கண்டு ரத்தினாவளி ஆச்சரியப்பட்டாள். அதன்பின் இருவரும் அந்தப் பழத்தைப் பகிர்ந்து தின்றார்கள். அதன் பின் ரத்தினாவளி ''நீங்கள் என்ன நினைத்துக் கொண்டு நின்றீர்கள்?'' என்று கேட்டாள்.

மந்தஹாசனும் ''ரத்தினா! நான் சொல்லப் போவதைக் கேட்டு நீ மகிழ்வாய் என்றே நினைக்கிறேன். இந்தப் புனித மரத்தடியே நின்று தாம் கோருவது நியாயமானதாய் இருக்க வேண்டும். நமக்கு சந்தான பாக்கியம் இல்லை என்று விதிக்கப்பட்டது. அதை மீறி நமக்குக் குழந்தை வேண்டுமென்று விரும்புவது சரியா என்றுநான் சந்தேகப்பட்டேன்! முறையாக கணவனுக்கும் மனைவிக்கும் குழந்தை பிறக்க வேண்டும். வேறு எவ் வழியில் அது பிறந்தாலும் தர்ம நியாயமாகாது. எனவே நாம் இருவரும் வாழ்நாள் முழுவதும் சுகமாக இருக்கும்படிச் செய்தாலே போதும் என நினைத்தேன். அவ்விதமே ஆசி கூறும்படி அந்த மரத்திடமும் வேண்டினேன்'' என்றான்.



அது கேட்டு ரத்தினாவளி திகைத்தாலும் தனக்கு இப்படி உயர் நோக்கம் கொண்ட கணவன் கிடைத்ததற்காக மகிழ்ந்தாள். மறுநாளே அவர்கள் தலைநகருக்குத் திரும்பி வந்தார்கள். இதற்குப் பின் ஐந்தாவது நாள் கிருஷ்ண பட்சப் பஞ்சமி வந்தது. சந்திரகாந்தாவும் ரத்தினவளியைப் காண வந்தாள்.

ரத்தினாவளியும் அவளை வரவேற்று உட்கார வைத்து ''சந்திரகாந்தா! நான் கொடுத்த வாக்கின் படி நடக்க முடியவில்லை. என்னை

மன்னித்துவிடு. என் கணவர் என்னைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் தம் மனைவியாக ஏற்க முடியாது என்று கூறி விட்டார்'' என்று கூறி எல்லாவற்றையும் விவரமாகக் கூறினாள்.

எல்லாவற்றையும் கேட்ட சந்திரகாந்தா ''ரத்தினா! நீ மிகவும் கொடுத்து வைத்தவள். விரைவிலேயே உங்களுக்குக் குழந்தை பிறக்க ஆசி கூறுகிறேன்'' எனக் கூறிவிட்டு மறைந்து போனாள். என்ன ஆச்சரியம்! விரைவிலேயே ரத்தினாவளி கர்ப்பவதியாகி அழகான ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! ரத்தினாவளி சந்திரகாந்தாவிற்குத் தான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றாமல் போனதும் சந்தான ரேகையே இல்லாத ரத்தினாவளி குழந்தை பெற்றதும் சரியா? இக் கேள்விகளுக்கு சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''ரத்தினாவளி தன் சுயநலம் காரணமாக வாக்குத் தவறவில்லை. அவளது கணவன் கூறிய விளக்கம் அவளுக்குச் சரியானது எனத் தோன்றியது. ஏனெனில் அவர்களுக்குக் குழந்தை பிறக்காது என விதி எழுதி விட்டது. அதை மீறினால் தர்மத்திற்கு விரோதமாகும். எனவே இருக்கும் வாழ் நாளைச் சுகமாகக் கழிக்க மந்தஹாசன் எண்ணியது சரியே என அவள் எண்ணினாள். இப்படி இருவரும் எண்ணியது மிக உயர்ந்த நோக்கமாகும். இது நிறைவேற ஆசி கூறினாள் சந்திரகாந்தா. எனவே மந்தஹாசனின் உயர்ந்த நோக்கம் சந்திரகாந்தாவை மணக்க விடாமலும் ரத்தினாவளிக்குக் குழந்தை பெறும் பாக்கியத்தையும் அளித்தது'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# பம்பாய் வழியில்

கருத்து: **மீராநாயர்** ■ ஓவியர்: **கௌதம் சென்**



▲டாமன் கடற்கரையில் சவுக்குத் தோப்பு

குஜராத் மாநிலத்திற்கும் மகாராஷ்டிர மாநிலத்திற்குமிடையே உள்ள டாமன் மத்திய அரசின் ஆட்சிப் பகுதி. இதன் கடற்கரையின் நீளம் 12 கி.மீ. இதன் கடற்கரை மீனவர் கிராமங்களையும் சவுக்கு மரங்களையும் கொண்டது, மோதியிலும் நானிடாமனினுள்ள கோட்டைகள் போர்த்துகிசியர் இருந்ததை நினைவுபடுத்துகின்றன.

இங்கு குஜராத்தின் 720 கி.மீ. கடற்கரை முடித்து கொங்கணக் கடற்கரை ஆரம்பமாகிறது. இதன் வட திசையில் தஹனு என்ற கடற்கரை ஊர் உள்ளது. இங்கு பார்ஸிகள் வந்து குடியேறும் வரை இப்பகுதி பொட்டலாக இருந்தது. 1880-ல் வந்த பார்ஸிகள் பாலையாக இருந்த இப்பகுதியைச் சோலையாக மாற்றி விட்டார்கள்.

தஹனு சப்போட்டாப் பழத்திற்கும் பெயர் போனது. இதுதான் இங்கு அதிகமாக விளைவது. இங்கிருந்து இப்பழங்களையும் பம்பாய்க்கு அனுப்புகிறார்கள். பம்பாயிலிருந்து அவை இந்தியாவின் மற்றப் பகுதிகளுக்கு அனுப்பப்படுகின்றன. தஹனுவில் அண்மையில் பம்பாய் புறநகர் மின் விநியோக நிறுவனத்தால் நிறுவப்பட்டுள்ள

▼தஹனுவின் புகழ் பெற்ற சப்போட்டாக்கள்



நிலக்கரியால் இயங்கும் மின் நிலையத்தால் காற்றும் சுற்றுப் புறச் சூழலும் கெட்டு இப்பழ உற்பத்தியைப் பெரிதும் பாதிக் குமோ என்று இங்குள்ளவர்கள் அஞ்சுகிறார்கள்.

தஹனூவிலிருந்து பம்பாய்க்குச் செல்லும் வழியில் நடுவே நாலா சோபரா என்ற சிற்றூர் உள்ளது. இது பழங்காலத்தில் ஷர்பரக் என்று பெயர் பெற்றிருந்தது அக்காலத்தில் அது ஒரு துறைமுகமாக இருந்தது ஷர்பரக் என்ற பெயரிலிருந்து சுபாரி (பாக்கு) என்ற பெயர் வந்தது. இங்கிருந்து வெளியூர்களுக்கு அனுப்பப்படும் பொருள் பாக்குதான். இது கேரளப் பகுதியிலிருந்து இங்கு கொண்டு வரப்பட்டு இந்தியாவின் மற்றப் பகுதிகளுக்கு அனுப்பப்படுகிறது. முத்துச் சிப்பிகளை எடுத்து முன் காலத்தில் முத்துக்களை சீனாவிற்கு இங்குள்ளவர்கள் அனுப்பி வந்தார்களாம். புத்தர் மறு பிறவி எடுத்து இங்கு பிறந்ததாக ஒரு கதையும் உள்ளது. இங்கு பலஸ்தூபிகளும் கண்டு பிடிக்கப் பட்டுள்ளன.



வஜ்ரேஸ்வரியின் வெந்நீர் ஊற்றுக்கள்

நாலா சோபராவிற்குத் தெற்கே 10 கி.மீ. தூரத்தில் வாசாயின் படகு கட்டுத்துறையான பாப்டி உள்ளது. ஒரு காலத்தில் அடர்ந்த காட்டுப் பகுதியாக கேர், போண்டா, ஹல்த், கலம்பு, சாக மரங்களைக் கொண்டிருந்தது. இம்மரங்கள் உறுதியானவையாய் படகுகள் செய்ய ஏற்றனவாய் இருந்தன. போர்த்துக்கீசியர் ஆட்சி காலத்தில் 16வது, 17வது நூற்றாண்டுகளில் இங்கு படகு கட்டும் தொழில் மும்மரமாக நடந்தது. பணக்காரப் பிரபுக்கள் வாழ்ந்த பல மாளிகைகளும், பழங்காலக் கோட்டையும் தற்போது பாழடைந்து கிடக்கின்றன. வாசாய் பம்பாய்க்குக் காய்கறிகளை அனுப்பும் ஒரு முக்கிய ஊராக உள்ளது.

**பம்பாயிலிருந்து 35 கி.மீ. தொலைவிலுள்ள போர்த்துகிசீய வாசாய் கோட்டை**



**கான்ஹேரியின் சைத்ய குகையிலுள்ள ஸ்தூபம்**





இப்பகுதியில் பாயும் டான்ஸாரு நதிக் கரை ஓரத்திலும் அதைச் சுற்றிலும் பல வெந்நீர் ஊற்றுகள் உள்ளன. வஜ்ரேஸ்வரியிலும் கணேஷ் புரியிலுமுள்ள வெந்நீர் ஊற்றுகள் பிரபலமானவை. வஜ்ரேஸ்வரி வாசாயிரயில் நிலயத்திலிருந்து 10 கி.மீ. தூரத்தில் உள்ளது. குழாய்களும் நீர்த் தொட்டிகளும் இங்குள்ள பல வெந்நீர் ஊற்றுக்களைச் சுற்றிக் கட்டப்பட்டுள்ளன. இவற்றின் நீர்க் குமிழிகள் கந்தக வாசனையுடன் வெளி வருகின்றன கணேஷ் புரியிலுள்ள வெந்நீர் ஊற்றோ மிக வெப்பமானதாய் அதற்குள் கை கூட விட முடியாதபடி உள்ளது.

பம்பாயின் புறநகரான போரவ்லியினருகே கான்ஹகிரி மலையின் கான் ஹேரி குகைகள் உள்ளன. மேற்கிந்தியாவில் மிக அதிக பௌத்த குகைகளைக் கொண்டது இப்பகுதி. இங்கு 109 குகைகள் உள்ளன. புத்தசன்னியாசிகள் நிறுவிய பல ஸ்தாபிகளும் கல் வெட்டுகளும் இக்குகைகளில் உள்ளன. இவை 2 முதல் 10வது நூற்றாண்டிற்குள் அமைக்கப்பட்டவையாம். குழாய்கள் வழியாக நீர் வருடம் முழுவதும் கிடைக்கிறது. கழிவு நீரை அகற்றக் குழாய்களும் மழை நீரை அகற்ற வடிகால்களும் உள்ளன.

இங்குள்ள இருமுக்கிய குகைகள் சைத்யாவும், தர்பாரும் ஆகும். தர்பார் குகையில் வரிசையாகக் கல் ஆசனங்கள் உள்ளன. இங்கு பௌத்த சன்னியாசிகள் அமர்ந்து பிரார்த்தனை செய்து வந்தார்கள் போலும்,சைத்ய குகையில் மிகப் பெரிய ஸ்தூபமும் புத்தரது பெரிய சிலைகளும் உள்ளன.

***கான்ஹேரியின் சைத்ய குகை***

***கான்ஹேரியின் சைத்ய குகையிலுள்ள பெரிய ஸ்தூபம்***

அம்பர்நாத் சிவன் கோவில்

ஜோகேஸ்வரியில் கான்ஹரி குகைகளிலிருந்து சற்றுத் தொலைவில் பாறைகளில் குடைந்து கட்டப்பட்ட சிவன் கோவில் ஒன்று உள்ளது. 8வது நூற்றாண்டின் மத்தியில் அது கட்டப்பட்டதாகும்.

அம்பர்நாத் கல்யாணுக் கருகேயும் பம்பாயிலிருந்து 54 கி.மீ. தொலைவிலும் உள்ளது. இங்குள்ள சிவன் கோவில் பெயர் பெற்றது. இது கருங்கற்களால் கட்டப் பட்டு பள்ளத்தில் உள்ளது. இங்குள்ள லிங்கம் தானே தோன்றிய சுயம்புலிங்கம். இது தரைமட்டத்திற்கு எட்டடி கீழே உள்ளது. இங்கு பாகிஸ்தானிலிருந்து வந்த சிந்தி அகதிகள் தங்கி இப்பகுதியை வளமுறச் செய்து கோவிலையும் பிரபலப் படுத்தினார்கள்.

பம்பாயின்புறத்தே நீர் பாறைகளைத் தாண்டி தானே உள்ளது. கடல்நீர் உட்புகுந்த பகுதியில் உப்பளங்களும் திட்டு களும் இங்கு உள்ளன. இங்கு முத்துச்சிப்பிகள் ஒரு காலத தில் எடுக்கப்பட்டன. இப் போது கடல் நீர் புகுந்த இப் பகுதி குறுகலாக உள்ளது. தானேவிலிருந்து ட்ராம் பேவரை 18 கி.மீ தூரம் இந் நீர்ப் பகுதி பரவி யுள்ளது.

ட்ராம்பேயில்தான் நம் நாட்டின் பாபா அணு ஆராய்ச்சி மையம் அமைந் துள்ளது.



பாபா அணு ஆராய்ச்சி நிலையம்



# நல்ல கனவே!

கமலா மிகவும் கர்வம் பிடித்தவள். தன் மாமியாரை மதிப்பதே இல்லை. அவளுக்கு சாதம் போடுவதை ஏதோ பெரிய தரும காரியம் என்று நினைத்து வந்தாள். மாமியார் நின்றால் குற்றம், படுத்தால் பாவம் என்று கூறித் துன்புறுத்தி வந்தாள். பணக்காரரின் மகள் என்பதால் அவளுக்குத் திமிர் அதிகம்.

மாமியார் கோவிலுக்குப் போய் விட்டு வந்தால் கமலா ''நான் எப்போது ஒழிவேன் என்று பகவானிடம் வேண்டிக் கொண்டீர்களா?'' என்று கேட்பாள். எங்கும் மாமியார் போகாமல் வீட்டுத் திண்ணையிலே உட்கார்ந்திருந்தாலும் ''சாப்பிட்டு விட்டு வீதியில் போவோர் வருவோரிடம் என்னைப் பற்றிக் குறை கூறுவதுதான் உங்கள் வேலையா?'' என்று கடிந்து கொள்வாள்.

கொஞ்சம் அதிகம் சாதம் போடு என்று மாமியார் கேட்டால் அவள் ''என்ன? என் கணவரைச் செலவு செய்ய வைத்து மொட்டை அடித்து விடுவது என்ற எண்ணமா?'' என்பாள். சாதம் கொஞ்சம் குறைத்துப் போடு என்று அவள் கூறினால் கமலா ''ஏன்? சாப்பிடாமல் இளைத்துப் போய் ஊராரிடம் நான் பட்டினி போட்டு உங்களைக் கொல்கிறேன் என்று சொல்வதற்கா?'' என்று கேட்பாள்.

கமலா தன் மாமியாரை இப்படிப் படாதபாடு படுத்தி வருவதை அவள் கணவன் கணபதி பார்த்தும் பாராதது போல இருந்து வந்தான். காரணம் அவனுக்குக் கமலாவிடம் பயம். அவளோ அவனை பொம்மை போல ஆட்டி வந்தாள். அவனும் அவளுக்கு அடங்கித் தன் தாயாருக்கு ஆறுதல் கூடக் கூறாமல் இருந்தான்.

ஒரு நாள் அதிகாலையில் ஒரு

—குரு. ரம்யா—



கெட்ட கனவை கமலா கண்டு பயந்து போய் தூக்கம் கலைந்து படுக்கையில் உட்கார்ந்தாள். கனவு இதுதான்: ஆகாயத்தில் மேகம் சூழ்ந்திருந்தது. நான்கு பேர்கள் மூங்கில் கட்டிய பச்சோலை மீது எதையோ வைத்துத் தூக்கிக் கொண்டு எங்கோ போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களின் பின்னால் ஒரு கிழவி தடியை ஊன்றி நடந்து அழுது புலம்பியவாறே சென்று கொண்டிருந்தாள்.

இந்தக் கனவை கமலா தன் கணவனிடம் கூறி ''விடியற்காலையில் நான்கண்ட கனவு இது. இதன் அர்த்தம் என்ன? என் மனம் ஏனோ பயப்படுகிறது'' என்றாள். கணபதியும் சற்று யோசித்துவிட்டு ''ஓ! பகலில் பார்த்த கனவானால் பலிக்காது என்று பேசாமல் இருந்து விடலாம். இது நீ விடியும் வேளையில் பார்த்த கெட்ட கனவு. கண்டிப்பாகப் பலித்து விடும். இதனால் நமக்கு என்ன ஆபத்து வருமோ?'' என்று கூறி சற்று நிறுத்தினான்.

அது கேட்டுக் கமலா ''ஆபத்தா? நமக்கா?'' எனக் கேட்கவே கணபதியும் ''ஆமாம். நமக்கே வரலாம். எதற்கும் இவ்வூருக்கு வெளியே உள்ள புளியந்தோப்பில் ஒரு யோகி வந்து தங்கி இருக்கிறார். அவர் வருடத்திற்கு ஒருமுறை அங்கு வந்து நான்கு நாட்கள் தங்கி விட்டுப் போவார். என் கல்யாணத்திற்கு முன் நான்கண்ட கனவை அவரிடம் கூறி அதன் பொருளைத் தெரிந்து கொண்டேன்'' என்றான்.

அப்போது கமலா ''அந்தக் கனவும் இதைப் போலக் கெட்ட கனவுதானா? விடியற்காலையில் கண்ட கனவா?'' என்று ஆவலுடன் கேட்டாள். கணபதியும் ''விடியற்காலையில் கண்ட கனவு தான். ஆனால் கெட்ட கனவில்லை. நல்ல கனவே. நான் மிக அழகான பெண் ஒருத்தியின் பின்னால் அக்கனவில் நடந்து போய்க் கொண்டிருந்தேன். அவள் சென்ற இடத்தில் எல்லாம் நறுமணம் வீசியது. அவள் என்னை ஒரு பூந்தோட்டத்திற்குள் அழைத்துச் சென்றாள். அங்கு போனதும் அவள் திடீரென மாயமாய் மறைந்து விட்டாள்'' என்றான்.

கமலாவும் ''அப்படியா? அதன்

பிறகு?'' என்று கேட்கவே கணபதியும் ''அதன்பிறகு நான் அன்று புளியந் தோப்பிற்கு வந்திருந்த இந்த யோகி யைக் கண்டு நான் பார்த்த கனவைக் கூறி அதன் பொருள் என்ன என்று கேட்டேன். அவரும் விரல் விட்டுக் கணக்கு போட்டுப் பார்த்து என்னிடம் ''நீ ஒரு அழகாக பெண்ணை மணக்கப் போகிறாய். பூந்தோட்டத்தில் போனால் மனம் எப்படி மகிழுமோ அப்படியே உன் வாழ்வும் மகிழ்ச்சி கரமாக அமையப் போகிறது. அந்தப் பெண் போகுமிடம் எல்லாம் நறு மணம் வீசியதால் ஒரு மலர் எங்கிருந் தாலும் நறுமணம் வீசுவது போல அவள் இருப்பாள். அவள் பெயரும் ஒரு மலரின் பெயராகத்தான் இருக் கும்'' என்றார். அவர் சொன்னது என் விஷயத்தில் அப்படியே பலித்து விட் டது பார்'' என்றான்.

கமலாவும் ''ஆமாம். உண்மை தான். என் பெயர் ஒரு மலரின் பெயர். நான் அழகாக இருக்கிறேன். எங்கு சென்றாலும் எனக்கு மதிப்பு. நாமும் சுகமாகத்தான் வாழ்கிறோம். உங்கள் கனவு பலித்தது. அப்படியானால் என் கனவு பற்றி இன்று மாலையில் அவரைக் கண்டு அர்த்தம் தெரிந்து கொண்டு வருகிறேன்'' என்றாள்.

கணபதியும் ''அப்படியே செய். அவர் மிகவும் சக்தி வாய்ந்தவர். எனக்கு நான் கண்ட கனவின் பொருளைக்கூறியது போல உனக்கும் உன் கனவைப் பற்றி விளக்கமாகக் கூறுவார்'' என்றான்.



அன்று மாலை அவள் தன் மாமி யாரிடம் ''நான் சற்று வெளியே போய் வருகிறேன். அது வரை அக்கம்பக் கத்து வீடுகளுக்குப் போய் வம்பு பேசாமல் வீட்டிலேயே இருங்கள். ஜாக்கிரதை'' என்று எச்சரித்து விட் டுப் புளியந்தோப்பிற்கு வந்துள்ள யோகியை பார்க்கச் சென்றாள்.

கமலா வந்து நின்றதும் யோகி கண் திறந்து பார்த்தார். அவர் தன் நீண்ட தாடியை உருவியவாறே ''பெண்ணே! அப்படி உட்கார். உனக்கு என்ன சந் தேகம்? தாராளமாகக் கேள். யாம் பதிலளிக்கிறோம்'' என்றார். கமலா வும் தான் விடியற்காலையில் கண்ட கனவைக் கூறி அதன் பொருள் என்ன



என்று கேட்டாள்.

யோகியும் விரல் விட்டுக்கணக்குப் போட்ட பின் "நீ பார்த்த கனவின்படி நான்கு பேர்கள் தன் மாமியாரைக் கொடுமைப்படுத்திய பெண் இறந்த தால் அவளைச் சுமந்து கொண்டு நரக லோகத்திற்கு சென்று கொண்டிருக் கிறார்கள் என்பது பொருள். அவள் பின்னால் நடந்து செல்வது அவளது மாமியார். அவள் அந்த ஆட்களிடம் "எமதூதர்களே! அவள் என் மருமகள். இப்போதுதான் விவாகமாகி வந்தி ருக்கிறாள். இன்னமும் ஒரு குழந்தை கூடப் பெறவில்லை. அதற்குள் அவளைக் கொண்டு செல்கிறீர்களே" என்று கதறிக் கொண்டே போகிறாள். நீ இக் கனவைப் பார்த்ததால் உனக்கு விரைவில் மரணம் என்றும் உன் மாமியார் கதறி அழுவாள் என்பதும் பொருள். நீயும் உன் மாமியாரைக் கொடுமைப் படுத்தி வருகிறாய் என்ப தும் உனக்கும் இதுவரை குழந்தை எதுவும் பிறக்கவில்லை என்பதும் தெரிகிறது. இதெல்லாம் உண்மை தானே!" என்றார்.

கமலாவும் பயந்து போய் "ஆமாம். உண்மைதான். ஆனால் எனக்காக கதறி அழுது வருபவள் என் மாமியாரா?" என்று கேட்கவே யோகியும் "ஆமாம். இப்படி நல்ல மனம் படைத்த உன் மாமியாரைக் கொடுமைப்படுத் தினாயே. இதனால் இதுவரை உன் பாவம் அதிகரித்து நரகத்திற்குப் போகும் நிலை ஆயிற்று" என்றார்.

அப்போது கமலா "சுவாமி! இந்தப் பாவத்திற்கு ஏதாவது பரிகாரம் செய் தால் நான் மரணத்திலிருந்து தப்பி நரக லோகத்திற்குப் போகாமல் இருக்க லாம் அல்லவா?" என்று கேட்டாள். யோகியும் சற்று யோசித்து "ஆம்! பரிகாரம் இருக்கிறது. இப்போது முதல் நீ உன் மாமியாரை உயிருக்கு உயிராக நேசித்து அன்புடனும் மரி யாதையுடனும் நடத்தி வா. இதனால் அவள் மனம் மகிழ்ந்து உன்னை மனதார ஆசீர்வதிப்பாள். அதனால் நீ கண்ட கெட்ட கனவின் சக்தி குறைந்து மறைந்து போய் விடும். நீ சுகப்படுவ தோடு உனக்கு விரைவிலேயே குழந்தையும் பிறக்கும். நான் சொன்ன படி நட. நீ சுகப்படுவாய்" என்று கூறி

ஆசிகள் அளித்து அனுப்பினார்.

வீட்டிற்கு வந்த கமலா முதல் வேலையாகத் தன் மாமியாரின் கால்களில் விழுந்து வணங்கி "என் கர்வத்தால் இதுவரை உங்களை கொடுமைப் படுத்தி விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள். இனிமேல் உங்களைத் துன்புறுத்த மாட்டேன்" எனக் கூறிக் கண்ணீர் வடித்தாள்.

மறுநாள் கணபதி கிணற்றங்கரையில் குளித்துக் கொண்டிருந்த போது அவனது தாயார் அங்கு வந்து "என்னடா இது அதிசயம்! கமலா இப்படி நேர்மாறாக நல்ல விதமாக மாறி விட்டாளே" என்று ஆச்சரியத்தோடு கூறினாள்.

கணபதியும் "இதற்கு காரணம் அவள் கண்ட கெட்ட கனவும் புளியந்தோப்பின் யோகியும்தான். அவள் நேற்று மாலை புளியந்தோப்பிற்கு போய் அங்கிருந்த யோகியைக்கண்டு விட்டு வந்திருக்க வேண்டும். அவர் ஏதோ இவளிடம் கூறி இருக்கிறார். அதனால்தான் இவள் மனம் மாறி இப்படி நடக்கிறாள் என நினைக்கிறேன். நான் கேள்விப்பட்டது போல அந்த யோகி சக்தி வாய்ந்தவர் என்பது இப்போது எனக்குப் புரிகிறது" என்றான். அதுகேட்டு அவனது தாயார் "அப்படியா! நானும் அந்த புளியந்தோப்பு யோகியைப் பார்த்துவிட்டு வருகிறேன். இப்படிப்பட்ட மகான்களை தரிசித்தாலே நம் பாவமெல்லாம் போகும். என் மருமகள் மனம் மாறி நல்லவளாக அவர் வழி செய்தாரே. அதற்காகவாவது அவரைக் கண்டு விட்டு வரவேண்டும்" என்றாள். கணபதியோ "நானும் கூடத் தான் அவரைப் பார்த்து அவரது ஆசிகள் பெற நினைத்தேன். ஆனால் இன்று காலை நான் புளியந்தோப்பிற்குப் போனபோது அவர் அங்கே இருக்கவில்லை. சிலரை விசாரித்தேன். அவர் இன்று காலையே ஊரை விட்டுப் போய் விட்டார்" என்றான்.

ஆனால் அந்த யோகியைப் போல வேஷம் போட்டது தானே என கணபதி யாரிடமும் கூறவில்லை.





# கள்ளனுக்குக் குள்ளன்!

வெகு காலத்திற்கு முன் ஒரு ஊரில் தருமன், நாகன் என்ற இரு நண்பர்கள் இருந்தார்கள். தர்மன் தாரள மனம் படைத்தவன். நாகன் கஞ்சன். தர்மன் தனக்குக் குழந்தை பிறக்காததால் புனிதத் தலங்களுக்குப் போய் வர நினைத்தான். அவனிடம் இருநூறு பவுன்கள் இருந்தன. அதில் நூறு பவுன்களை வழிச் செலவிற்கு எடுத்து வைத்துக் கொண்டு மீதமுள்ள நூறு பவுன்களை எங்கேயாவது பத்திரப்படுத்தி வைக்க அவன் எண்ணினான்.

அதுபற்றி அவன் தன் நண்பன் நாகனிடம் யோசனை கேட்கவே, அவனும் ''அதை என்னிடம் கொடுக்காதே. நான் செலவு செய்து விட்டு முழிப்பேன். அதனால் ஊருக்கு வெளியே உள்ள ஆலமரத்தின் கீழே புதைத்து வைத்து விடு. நீ ஊர் திரும்பி வந்த பின் அதை எடுத்துக் கொள்ளலாம்'' என்றான். தர்மனும் அது நல்ல யோசனைதான் என எண்ணி அன்றிரவு அவன் நாகனைத் துணைக்கு அழைத்துக் கொண்டு ஆலமரத்தடியே சென்றான். அங்கு குழி தோண்டி நூறு பவுன்களைப் புதைத்து வைத்து விட்டு இருவரும் திரும்பி வந்தனர்.

மறுநாள் தர்மன் தன் மனைவியுடன் தீர்த்த யாத்திரைக்குக் கிளம்பிச் சென்றான். மறுநாளிரவே நாகன் தன் மனைவி கூறியதன் பேரில் ஆலமரத்தடியே போய் தோண்டி முன் தினம் புதைத்து வைத்த நூறு பவுன்களை எடுத்துக் கொண்டு வந்து விட்டான். அவன் மனைவி அதைக் கொண்டு புது நகைகள் செய்து கொண்டு அணிந்து கொண்டு பெருமைப்பட்டுக் கொண்டாள்.

சில நாட்களுக்குப்பின் தர்மன் தீர்த்த யாத்திரையை முடித்துக் கொண்டு ஊருக்குத் திரும்பி வந்தான்.

—கி. வெங்கடாசலம்—

அவன் தனியாக ஆல மரத்தடியே போய் தான் வைத்த பணத்தை எடுக்க குழி பறித்துப் பார்த்தான். அங்கே பணம் இருக்கவில்லை. அவனுக்கு நாகன் மீதுதான் சந்தேகம் ஏற்பட்டது. ஏனெனில் பணத்தை அங்கே புதைத்து வைத்தது அவர்கள் இருவருக்குத்தான் தெரியும். எனவே அவன் நேராக கிராம மணியகாரரிடம் போய் விஷயத்தைக் கூறி நாகன்தான் அதை எடுத்திருக்க வேண்டும் என்று சொன்னான்.

மணியகாரரும் ''நீ அவனிடம் இதுபற்றி எதுவும் கேட்காதே. நான் சொல்கிறபடி செய்'' என்று கூறி ஒரு வழியைக் கூறினார். அதன்படி தருமன் நாகனைக் கண்டு ''நாகா! நலமா? நான் வந்ததும் உன்னைத்தான் பார்க்கிறேன்'' என்றான். நாகனும் ''நலமே. உன் தீர்த்த யாத்திரை நல்லவிதமாகத்தானே முடிந்தது?'' என்று கேட்டான்.

தருமனும் ''எல்லாம் நல்ல விதமாக முடிந்தது. யாத்திரையின் போது நான் ஆயிரம் பவுன்கள் சம்பாதித்தேன். அதை என்னிடம் வைத்துக் கொண்டிருக்க பயமாய் இருக்கிறது. அதனால் அதனையும் நாம் முன்பு நூறு பவுன்களைப் புதைத்து வைத்த இடத்திலேயே சேர்த்து வைத்து விட்டு இன்னும் பல க்ஷேத்திரங்களுக்குப் புனித யாத்திரை போகப் போகிறேன். நாளை இரவு என்னோடு துணைக்கு வா'' என்றான். நாகனும் அதற்குச் சம்மதித்தான்.



தர்மன் இன்னமும் ஆலமரத்தடியே போய் தோண்டிப் பார்க்கவில்லை என்று நாகன் நினைத்துக் கொண்டான். அதனால் ஓரளவு சந்தோஷப்பட்டாலும் மறுநாள் குழி தோண்டிப் பார்க்கும் போது முன் வைத்த பணம் இல்லாவிட்டால் தர்மன் சந்தேகப்படுவானே என்று எண்ணி என்ன செய்வது என்று தன் மனைவியிடம் யோசனை கேட்டான்.

அவளும் ''உங்கள் நண்பர் ஆயிரம் பவுன்களைப் புதைத்து வைக்கப் போவதால் அதையும் நாம் எடுத்துக் கொள்ள ஒரு நல்ல வாய்ப்பு கிடைக்கிறது. அதனால் என் நகைகளை எல்லாம் கொடுக்கிறேன். அவை மொத்தம் நானூறு பவுன்கள். அவற்றை

இப்போதே எடுத்துப் போய் அடகு வைத்து நூறு பவுன்கள் வாங்கி வாருங்கள். இன்றிரவே அதை ஆலமரத்தடியே வைத்துவிட்டு வந்து விடுங்கள். அதனால் நாளை இரவு நீங்கள் இருவரும் அங்கு போய் தோண்டியதும் வைத்த பணம் அப்படியே இருப்பது கண்டு உங்கள் நண்பருக்கு சந்தேகம் ஏற்படாது. அதன் பிறகு ஒரு நாள் நீங்கள் போய் அந்த ஆயிரத்து நூறு பவுன்களையும் எடுத்து வந்து விடுங்கள்'' என்று கூறித் தன் நகைகளை எல்லாம் எடுத்துக் கொடுத்தாள்.

நாகனும் அவற்றை அடகு வைத்து நூறு பவுன்களை வாங்கி அன்றிரவே ஆலமரத்தடியே போய் அதைப் புதைத்து வைத்து விட்டு வீட்டிற்குத் திரும்பிச் சென்றான். அவன் அவ்வாறு செய்வான் என்று எதிர்பார்த்து முன்பே தர்மன் அந்த மரத்திலிருந்து சற்று தூரத்தில் மறைந்து நின்றிருந்தான். நாகன் பணத்தைப் புதைத்து வைத்து விட்டுப் போன சற்று நேரத்திற்குப் பின் தர்மன் மரத்தடியே போய் மண்ணைப் பறித்துப் பணத்தை எடுத்துக் கொண்டு தன் வீட்டிற்குப் போனான்.

மறுநாளிரவு வெகுநேரம் வரை நாகன் தர்மன் வருவானென்று எதிர் பார்த்துக் காத்திருந்தான். ஆனால் அவன் வராது போகவே அவனே தர்மனின் வீட்டிற்குப் போய் ''என்ன தர்மா? மரத்தடிக்குப் போகலாமா?'' எனவே தர்மனும் ''வேண்டாம். அந்தப் பணத்தை நம் மணியக்காரர் கடனாக வாங்கிக் கொண்டிருக்கிறார். பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று இன்று மாலை ஆலமரத்தடிக்குப் போய் நான் புதைத்து வைத்திருந்த பணத்தையும் எடுத்துக்கொண்டு வந்து விட்டேன்'' என்றான்.

அதுகேட்டு நாகன் திகைத்துப் போய் தன் வீட்டிற்குப் போய் தன் மனைவியிடம் விஷயத்தைக் கூற அவளும் ''என் நானூறு பவுன் நகையை எப்படி மீட்பது?'' என்று வருத்தப் படலானாள்.






அக்கினி தேவனின் முறையீட்டைக் கேட்ட பிரம்மா சற்று யோசித்து '' நர நாராயணர்கள் இப்போது அர்ஜுனனாயும் கிருஷ்ணராயும் பூவுலகில் இருக்கிறார்கள். அவர்கள் காண்டவ வனப் பகுதிக்கு வருவார்கள். அப்போது அவர்களை அணுகி அவர்களது உதவியைப் பெறு. அவர்கள் உதவும் போது ஒரு இந்திரனல்ல, தேவர்களெல்லோரும் வந்தாலும் அவ்விருவரையும் எதிர்த்து நிற்க முடியாது'' என்றார்.

இதைக் கேட்டுத்தான் அக்கினி இப்போது கிருஷ்ணரிடமும், அர்ஜுனனிடமும் உதவி கேட்க வந்தான். அது கேட்டு அர்ஜுனன் ''இந்திரன் முதலானோரைத் தாக்க என்னிடம் பல ஆயுதங்கள் உள்ளன. ஆனால் ஒரு நல்ல வில்லும் வேகமாக ஓடக் கூடிய குதிரையும் கொடுத்தால் உனக்கு நாங்கள் உதவுகிறோம்'' என்றான்.

அக்கினிவருணனை நினைக்கவே அவனும் வந்தான். அக்கினி அவனிடம் ''வருணா! சந்திரன் உன்னிடம் கொடுத்த காண்டீபம் என்ற வில்லையும் அட்சய தூணிராவையும், கபித்வஜம் கொண்ட ரதத்தையும், சக்கராயுதத்தையும் எடுத்து வந்து கொடு'' என்றான்.

வருணனும் அக்கினி தேவன் கேட்டதையெல்லாம் எடுத்துக் கொண்டு வந்து கொடுத்து விட்டு மறைந்து போனான். அக்கினி தேவனும் அவற்றைக் கிருஷ்ணரிடமும் அர்ஜுனனிடமும் கொடுத்தான். சக்கராயுதத்தைக் கிருஷ்ணர் எடுத்துக்



''அக்கினி! இனி நீ காண்டவவனத்தை எரிக்கலாம். அதை யாராலும் தடுக்க முடியாது. நாங்கள் இருவரும் உன் பக்கம் துணையாக இருக்கிறோம்'' என்றார்.

அக்கினிதேவன் உற்சாகத்துடன் காண்டவ வனத்தின் மரம், செடி, கொடிகளை எரிக்கலானான். அந்த வெப்பம் தாங்காமல் அவ்வனத்திலிருந்த பல ஜீவராசிகள் தப்பி ஓட முயன்றன. அவை தப்பி விடாமல் கிருஷ்ணரும், அர்ஜுனனும் மடக்கி அக்கினிக்கு இரையாகும்படிச் செய்தார்கள். ஆகாயத்தில் பறந்து தப்ப முயன்ற பறவைகளும் வெப்பம் தாளாமல் அக்கினியில் விழுந்து மாண்டன.

காண்டவ வனம் எரிவதைக் கண்டு தேவர்கள் அச் செய்தியை இந்திரனிடம் கூறினார்கள். இந்திரன் வருணனை அழைத்து காண்டவ வனத்தின் மீது பெரும் மழையைப் பெய்யச் செய்யுமாறு கட்டளை இட்டான். ஆனால் என்னதான் மழை பெய்தாலும் அது காண்டவ வனத்தின் மீது விழும் போது சூட்டால் ஆவியாகிப் போயிற்று.

அர்ஜுனன் காண்டவ வனத்தில் ஒரு சொட்டு நீர் கூட விழாதபடி அம்புகளால் பந்தல் போட்டு விட்டான். இதனால் காண்ட வனம் எரிவதில் யாராலும் எவ்விதத் தடையையும் ஏற்படுத்த முடியவில்லை. ஆனால் நீண்ட காலமாகக் காண்டவ வனத்தைக் காத்து வந்த தட்சகன் அந்த

கொண்டார். காண்டீபத்தையும் அட்சய தூணிரத்தையும் அர்ஜுனன் எடுத்துக் கொண்டான். காண்டீபம் சாதாரண வில் அல்ல. அது லட்சம் ஆயுதங்களுக்குச் சமம். அவன் அடைந்த ரதமும் அட்சய தூணிரமும் விஸ்வகர்மா அமைத்தவை. அவற்றைச் சந்திரன் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த போரில் பயன்படுத்தினான்.

கிருஷ்ணர் எடுத்துக் கொண்ட சக்கரதாயுதம் எதிரிகளைக் கொன்று விட்டு அவரிடமே திரும்பி வரும் சக்தி பெற்றது. வருணன் தான் போகு முன் கௌமோதகி என்ற கதையையும் அவருக்குக் கொடுத்து விட்டுப் போனான். ஆயுதங்களைப் பெற்ற கிருஷ்ணர்

வனத்தை எரிக்க அக்கினிக்குக் கிருஷ்ணரும், அர்ஜுனனும் உதவி புரிவதால் அது முற்றிலும் எரிந்து விடும் என தெரிந்து அங்கிருந்து தப்பி குருக்ஷேத்திரத்தை அடைந்தான்.

தட்சகனின் மகன் அசுவசேனன் தன் தாயாருக்குப் பின் மறைந்து செல்வதை அர்ஜனன் பார்த்து விட்டான். அவன் எய்த அம்பு அவனது வாலையும் அவனது தாயாரின் தலையையும் துண்டித்தது. வால் அறுந்தும் அசுவ சேனன் தப்பி ஓடிவிட்டான்.

இதற்குப்பின் இந்திரனுக்கும், அர்ஜுனனுக்குமிடையே பலத்த போர் மூண்டது. ஆனால் இந்திரனால் அவனை வெல்ல முடியவில்லை. காண்டவ வனத்திலிருந்த ராட்சஸர்கள் போருக்கு வரவே அவர்களைச் சக்கராயுதத்தால் கிருஷ்ணர் கொன்றார். மயன் என்ற ராட்சஸன் கிருஷ்ணரின் தாக்குதலிலிருந்து தப்பி அர்ஜுனனிடம் சரணடைந்தான்.

காண்டவ வனத்தை அக்கினி பதினைந்து நாட்கள் எரித்தான். அது முற்றிலும் எரிந்து போயிற்று. அதிலிருந்து இறக்காமல் தப்பியவர்கள் தட்சகனும், அவனது மகன் அசுவசேனனும், மயனும், நான்கு சார்திக்கர்களுமே. இந்த சார்திக்கர்கள் மந்தபாலர் என்ற முனிவருக்குப் பிறந்தவர்கள்.

மந்தபாலர் பிரம்மசாரியாக இருந்து நீண்ட காலம் தவம் செய்து தன் யோக சக்தியால் சொர்க்கத்தை அடைந்தார்.



ஆனால் அவருக்கு சொர்க்கம் சுகத்தை அளிக்கவில்லை. அது ஏன் என்று அவர் அங்கிருந்த தேவர்களைக் கேட்டார். அதற்கு அவர்கள் ''நீங்கள் தவம் செய்து தேவர்களின் கடன் செலுத்தினீர்கள். ஆனால் புத்திரர்களைப் பெற்று பித்ருக்களின் கடனைச் செலுத்தவில்லை. அதனால்தான் உங்களுக்கு சொர்க்கம் சுகத்தை அளிக்கவில்லை'' என்றார்கள்.'

அது கேட்டு மந்தபாலர் தாம் புத்திரர்களைப் பெற எண்ணினார். அவர் பறவைகள் விரைவில் தம் சந்திதியைப் பெருக்கும் என்பதை நினைத்து சார்ங்கப் பட்சியாக மாறி. ஜரிதை என்ற பெண் பட்சியின் வாயிலாக நான்கு ஆண் குஞ்சுகளைப் பிறக்க வைத்தார்.

அதன்பின் அவர் தம் ஆசிரமத்திற்கு போய்க் குடும்ப வாழ்க்கையை மேற் கொண்டார்.

இப்படி இருக்கையில் ஒருநாள் அவர் காண்டவ வனத்தை எரிக்கச் சென்று கொண்டிருந்த அக்கினியைக் கண்டார். அவர் அக்கினி எதற்காகச் செல்கிறான் என்பதைத் தம் சக்தியால் அறிந்து கொண்டு ''அக்கினியே! காண்டவ வனத்தில் என் புதல்வர்கள் இருக்கிறார்கள். அவர்களை ஒன்றும் செய்யாமல் விட்டு விடு'' என்று கேட்டுக் கொண்டார். அக்கினியும் அவர் கேட்டுக் கொண்டதை ஏற்றதால்தான் நான்கு சார்திக்கர்களும் உயிர் தப்பினார்கள்.

காண்டவ வனத்தை முழுவதுமாக எரித்து அக்கினி தேவன் தன் அஜீர்ணத்தைப் போக்கிக் கொண்டான். அவன் தனக்கு உதவிய கிருஷ்ணருக்கும் அர்ஜுனனுக்கும் நன்றி செலுத்தி அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றான். இந்திரனும் கிருஷ்ணரதும், அர்ஜுனனதும் பராக்கிரமத்தைப் பாராட்டியவாறே தேவர்கள் புடை சூழ அவர்கள் முன் வந்தான்.

அவர்களும் இந்திரனை வரவேற்று கௌரவிக்கவே அவனும் மகிழ்ந்து போய் அவர்கள் கேட்கும் வரத்தை கொடுப்பதாகக் கூறினான். அர்ஜுனனும் தனக்கு திவ்விய அஸ்திரங்களைக் கொடுக்கும் படிக் கேட்டான். இந்திரனும் அவனிடம் ''உனக்குப் பரமேஸ்வரன் காட்சி அளிப்பார். அப்போது




உனக்கு அந்த அஸ்திரங்களைக் கொடுக்கிறேன்'' என்றான். பிறகு கிருஷ்ணரும் அர்ஜுனனும் என்றென்றும் இணை பிரியாமல் இருக்க வேண்டும் என்று அவன் ஆசீர்வதித்து விட்டு தேவர்களோடு தேவலோகத்திற்குத் திரும்பிச் சென்றான்.

இதன்பின் கிருஷ்ணரும் அர்ஜுனனும் யமுனை நதிக் கரையில் தாம் தங்கிய இடத்திற்குக் திரும்பிச் சென்றார்கள். அவர்களோடு மயனும் சென்றான். மயன் அர்ஜுனனை வணங்கி ''ஐயா! உங்கள் தயவால் நான் காண்டவனத்திலிருந்து உயிர் தப்பினேன். நான் எப்படி நன்றிக் கடனை உங்களுக்குச் செலுத்துவது? நான் ராட்சஸர்களுக்கு விசுவகர்மா. தேவர்களுக்கு



விசுவகர்மா எப்படிக் கட்டடக் கலை நிபுணரோ அதுபோல நான் அரக்கர் களின் கட்டடக் கலை நிபுணன். எனவே உங்களுக்கு ஒரு அற்புத மாளி கையை நிர்மாணித்துக் கொடுத்து விட்டுப்போகநினைக்கிறேன்'' என்று பணிவுடன் கூறினான்.

அர்ஜுனனும் கிருஷ்ணரைக் கலந்து ஆலோசித்து விட்டு ''சரி. என் தமையனாருக்கு இதுவரை எங்கும் இல்லாத நேர்த்தியான மாளிகையை யும் அரச மண்டபத்தையும் அமைத்து கொடு'' என்றான். மயனும் அவ்வாறே செய்வதாகக் கூறினான்.

கிருஷ்ணரும் அர்ஜுனனும் மயனை அழைத்துக் கொண்டு இந்தி ரப் பிரஸ்தத்திற்குச் சென்றார்கள். அங்கு அவர்கள் தருமரிடம் காண்டவ வனம் எரிந்தது பற்றிக் கூறி மயனை அர்ஜுனன் காப்பாற்றிய விதத்தையும் சொன்னார்கள். மயன் அதற்கு பதிலு பகாரமாக ஒரு மாளிகையையும் அதில் சபா மண்டபத்தையும் அமைத்துக் கொடுக்க விரும்புவதாகவும் கூறினார் கள். தருமரும் அது கேட்டு மகிழ்ந்து மயனை அவ்வாறே செய்ய அனுமதித் தார்.

மயனும் ஒருநல்ல நாளில் கட்டட வேலையை ஆரம்பித்தான். கிருஷ்ண ரும் துவாரகைக்குச் சென்று விட்டார். பாண்டவர்களும் கொஞ்சதூரம் வரை அவரோடு சென்று வழி அனுப்பி விட்டுத் திரும்பி வந்தார்கள். சில நாட்களில் மயனும் தன் அற்புதக் கட்டட வேலையைச் செய்து முடித் தான்.

மயன் இதற்கு முன் விருஷபர்வன் என்ற ராட்சஸ மன்னனுக்கு ஒரு மாளிகைகட்டித்தரபல விலையுயர்ந்த பொருள்களைச் சேகரித்து தன் சக்தி வாய்ந்த கதாயுதத்தையும் வைத்திருந் தான். வருணனின் சங்கான தேவதத்த மும் அப்பொருள்களோடு இருந்தது. மயன்கதாயுதத்தை பீமனுக்கும் சங்கை அர்ஜுனனுக்கும் அளித்தான்.

மயன் கட்டிய மாளிகை அற்புத மானது. அதில் பல நீர் நிலைகள் இருந்தன. சுவர்களில் நவரத்தினங்கள் பதிக்கப்பட்டிருந்தன படிக்கட்டுகள் படிகக் கற்களால் ஆனவை. சில இடங்களில் நீர் நிலைகள் சாதாரணத்

தரைபோலும் சாதாரணத் தரை நீர்நில யங்களாகவும் இருந்தன. அம்மாளிகை காண்போர் மனதைக் கவர்வதாக இருந்தது.

தருமர் இதற்காக மயனைப் பாராட்டி தக்கபடி கௌரவித்து அனுப்பி வைத்தார். அம்மாளிகையின் கிருகப் பிரவேச விழாவின் போது ஏராளமான தானங்களைச் செய்து தன் தம்பிகளோடு அதில் பிரவேசித்தார். பல நாட்டு மன்னர்கள் தருமரின் பெருமையை உணர்ந்து யானைகளையும், குதிரைகளையும், தங்க நாணயங்களையும் நகைகளையும் காணிக்கைகளாகச் செலுத்தினார்கள்.

இவ்வாறு காணிக்கைகள் செலுத்தியவர்கள் அங்க, வங்க, கலிங்க, ஆந்திர, பௌண்டுருக, கிராத, மகத, மாளுவ, சாளுவ, மத்ச்ய, கேகய, கராள, காம்போஜ, மத்ர, பாண்டிய மன்னர்களாவர். பல முனிவர்களும் அந்த சுப வேளையில் வந்திருந்தார்கள்.

நாரத முனிவரும் தம் சீடர்களோடு வந்திருந்தார். தருமர் அவர்களையும் பக்தியோடு உபசரித்து மரியாதையுடன் ஆசனங்களில் அமர்த்தினார். நாரதரும் தருமரிடம் ஒரு மன்னன் செய்ய வேண்டிய வேலைகளை எல்லாம் கூறி திக்பாலர்களின் சபைகள் எப்படிப்பட்டவை என்று வர்ணித்தார்.

பிறகு அவர் தருமரிடம் ''ராஜசூய யாகம் செய்தால் சொர்க்கத்தை அடையலாம். ஹரிச்சந்திரன் முதலிய மன்னர்கள் ராஜசூயயாகங்கள் செய்து பெரும் புகழ் பெற்று சொர்க்கத்தை அடைந்தார்கள். ஆனால் ஒரு விஷயத்தை மட்டும் நினைவில் வைத்துக் கொள். ராஜசூய யாகம் எவ்விதத் தடையும் இல்லாமல் நடக்க வேண்டும். இல்லாவிட்டால் பெருத்த அளவில் உயிர்ச் சேதம் ஏற்படும் மகா யுத்தம் நடக்கும்'' என்றார்.

பிறகு அவர் தருமரிடம் ''நீ இது பற்றி ஆழ்ந்து யோசித்து ஒரு முடிவுக்கு வா'' என்று கூறி தருமரிடம் விடை பெற்றுக் கொண்டு துவாரகாபுரிக்குச் சென்றார்.



# அம்புலிமாமா செய்திகள்

**ஒரு விநாடி தாமதம்!**

புத்தாண்டு ஒரு விநாடி தாமதித்தே வந்துள்ளது. 1996ம் ஆண்டு லீப் வருடம். இந்த ஆண்டில் பிப்ரவரி மாதத்திற்கு 29 நாட்கள் இது போல அணு இயங்கி கடியாரத்தில் டிசம்பர் 31ந் தேதியன்று ஒரு விநாடி அதிகரித்தார்கள். இதனால் புதிய வருடம் ஒரு விநாடி தாமதித்துப் பிறந்தது என்றாகிறது. பூமியின் சுழற்சிக்கு ஏற்ப அணுசக்தியால் இயங்கும் கடியார நேரத்தைத் திருத்தி வைத்திருக்கிறார்கள். புவிஇயல் நிபுணர்கள். பூமியில் முக்கால் பகுதி நீர் அதனால் கடல்களின் அசைவுகளால் நேரத்தில் சிறிதளவு மாற்றம் ஏற்படத்தான் செய்யும், இதைக் கணக்கிட்டே நிபுணர்கள் அணு இயக்கும் கடியாரத்தில் நேரத்தைத் திருத்தி வைக்கிறார்கள்.

**மீனுக்குக் கண்ணாடிக் கண்**

நீர் என்றதும் மீன்தானே நினைவிற்கு வரும்! அமெரிக்காவில் கரோலினாவிலுள்ள மீன்காட்சியகத்தில் ஒரு மீனின் கண்ணிற்கு அறுவை சிகிச்சை செய்தார்கள். அதன் ஒரு கண்ணிற்கு பதிலாக தங்க நிறத்திலுள்ள கண்ணாடிக்கண் பொருத்தப்பட்டது. கண்ணின் அறுவை சிகித்தை நீருக்கு வெளியே செய்யப்பட்டது. சென்ற நவம்பரில் வடகரோலினாவின் கால்நடை மருந்துவக் கல்லூரியில் இச்சிகிச்சையைச் செய்த மருத்துவர் மிக நுண்ணிய கருவிகளையும் பூதக் கண்ணாடிகளையும் பயன்படுத்தியும் மீனுக்கு மருந்தையும் கொடுத்தே அதனைச் செய்தாராம்.

**பாண்டா கிளப்**

ஜவாஹர்லால் ஒரு பாண்டா குட்டியுடன் விளையாடுவது போலுள்ள போட்டோ மிகப் பிரபலமானது. அவர் அதை டில்லியிருள்ள தீன் மூர்த்தி பவனில் வளர்த்து வந்தார். பெரிய பெரிய கண்களோடும் அவற்றைச் சுற்றி வரிகளோடும் உடல் முழுவதும் கருப்பும் வெள்ளையுமான ரோமங்கள் அடர்ந்தும் உள்ள பாண்டா சீனா நிலப்பகுதியில் காணபடுவதாம். நேருவின் பிறந்த தினமான நவம்பர் 14ந் தேதி அகில உலக பாண்டா கிளப் என்ற அமைப்பைத் தொடங்கியுள்ளார்கள். இதில் ஆறிலிருந்து பதினாறு வயதுடையவர்கள் மட்டுமே உறுப்பினர்களாக ஆக முடியும் இந்தக் கிளப்பின் சென்னைக் கிளையில் நூறு உறுப்பினர்கள் இருக்கிறார்கள். நவம்பர் 14ல் இதன் தொடக்க விழா கோலாகலமாக நடந்தது. அங்கு 'ஜயண்ட் பாண்டா' முன் கூடி இருந்த சிறுவர்களெல்லாம் பலத்த கரவொலி எழுப்பினார்கள். இந்த அமைப்பை நிறுவியவர் பிரபல டென்னிஸ் விளையாட்டு வீரரான திரு. விஜய் அமிர்தராஜ இதன் பணிகள் பற்றி அவர் அப்போது விவரித்தார். நீங்கள் இந்தக் கிளப்பின் உறுப்பினராக விரும்பினால் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி. பாண்டா கிளப் ஆஃப் இண்டியா, 2, கிருஷ்ணமா ரோடு, நுங்கம்பாக்கம், சென்னை 600 034.



# வெள்ளை மருது

பாண்டவர்களில் அர்ஜுனன் இந்திரனின் மகனாகக் கருதப்படுபவன். அவன் இந்திரனைப் போல் வெளுப்பாக இருந்தானாம். வெள்ளையு மருது மரமும் அப்படி இருந்ததால் நம் நாட்டின் சில பகுதிகளில் இதனை அர்ஜுன மரம் எனக் குறிப்பிடு கிறார்கள்.

அஸ்ஸாம், வங்காளம், கேரளம், தென்கர்நாடகம் ஆகிய பகுதிகளில் இம்மரங்கள் பரவலாகத் தென்படுகின்றன. இவை குறிப்பாக ஆற்றங்கரை ஓரங்களிலும், ஈரப்பசையுள்ள நிலப்பகுதிகளிலும் நன்கு வளர்கின்றன. சில சம்ஸ்கிருத நூல்களில் இந்த மரம் 'நதிசர் ஜலனி' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

லத்தீன மொழியில் இது! 'டெர்மினாலயா அர்ஜுனா!' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதன் மலர்கள் இளம் மஞ்சள் நிறமாய் இருக்கும். இவை மரக் கிளைகளின் நுணிகளில் பூக்கும்.

இம்மரம் மார்ச் - ஜுன் மாதங்களில் பூக்கும், பளபளக்கும் பச்சை இலைகள் ஒன்றின் எதிரே மற்றது இருக்கும். குளிர் காலத்தில் இதன் இலைகள் உதிருமுன் பச்சை நிறத்திலிருந்து தாமிர நிறத்தை அடையும். அப்போது இம்மரம் பார்ப்பதற்கு மிக அழ காக இருக்கும். இலைகள் உதிர்ந்தாலும் கூட இம்மரம் மொட்டையாக இராது. கொஞ்ச மாவது இலைகளைக் கொண்டிருக்கும்.



இதன் மரப்பலகைகள் லேசாக இருந் தாலும் மிக உறுதியானவையாக இருக்கும் வீட்டுக் கதவுகள், ஜன்னல்கள், விவசாயத் திற்கு வேண்டிய ஏர் போன்றவைகளைச் செய்ய இம்மரம் பயன்படுகிறது.

நம் நாட்டு முனிவர்கள் - 10

# ஜனகர்

ஒரு நாட்டின் மன்னனாக இருந்து தவத்தின் வலிமையை உணர்ந்து சிம்மாசனத்தைத் துறந்து தவம் செய்து ராஜரிஷி என்ற பெயரைப் பெற்றவர் விசுவாமித்திரர். அவர் ஆறு குணங்களை வென்று உயரிய பிரம்மரிஷி என்ற பெயரையும் பெற்றவர்.

மிதிலாபுரி மன்னரான ஜனகர் அரசராக இருந்து ஞான வைராக்கியத்துடன் கிருகஸ்தா சிரமத்திலிருந்து ஆன்மீக சாதனை புரிந்தவர். அவரது ஆன்மீக சாதனைக்கு அரச பீடம் குறுக்கே நிற்கவில்லை. இதற்கு காரணம் தான் ஒரு அரசர் என்ற கர்வம் அவரிடம் இல்லாது போனதேயாகும். நாட்டை ஆளுவரையும் அவர் கடவுளுக்குப் புரியும் பணி போலவே கருதி புனித வேள்வி நடத்துவது போலவப் புரிந்ததால் அவர் கர்மயோகியாகவும் ராஜரிஷியாகவும் கருதப்பட்டார்.

வால்மிகியின் ராமாயணத்தில் ஜனகர் மிக உயர்ந்த பாத்திரமாவார். அவர் யாகம் செய்ய எண்ணி பூமியை ஏர்கொண்டு உழுதபோது அதன் துனி பூமியிலிருந்த தங்கப் பேழையில் பட்டு அதிலிருந்து வந்தவள்தான் சீதை. அவர் அவளைத்தன் மகளாக வளர்த்து ராமருக்கு விவாகம் செய்து வைத்தது தான் யாவருக்கும் தெரிந்ததாயிற்றே!

ஜனகர் அவ்வப்போது பண்டிதர்களைக் கூட்டி தர்ம சாஸ்திரங்கள் பற்றி விவாதங்கள் நடத்தி வந்தார். அவரும் அவரது குல குருயக் ஞவாங்கரும் புரிந்த விவாதம் மிகப் புகழ் பெற்றது அது கீழ்க் கண்டவாறானது.

ஜனகர் : மகாத்மாவே! மனிதனை நடத்திச் செல்லும் ஒளி எது?

யக்ஞவால்கள் : சூரியன்

ஜனகர் : சூரியன் அஸ்தமித்த பிறகோ?

யக்ஞவால்கர் : சந்திர ஒளி

ஜனகர் : அந்தச் சந்திரனும் இல்லாதபோது

யக்ஞவால்கர் : அக்கினியின் ஒளி

ஜனகர் : அக்கினியும் இல்லாவிட்டால்?

யக்ஞவால்கர் : அப்போது அவனது வாக்கு

ஜனகர் : வாக்கும் இல்லாத நிலையிலோ!

யக்ஞவால்கர் : அவனது ஆத்மா!



# உங்களுக்குத் தெரியுமா?

1. கடந்த 12 ஆண்டுகளாக அணு ஆயுதமில்லாப் பகுதியாக உள்ளநாடு எது?
2. இந்திய தேசிய காங்கிரசின் நூற்றாண்டு விழா எப்போது கொண்டாடப்பட்டது?
3. கிரகங்களில் உருவில் மிகப் பெரியது எது?
4. டில்லியில் அந்தக் கால வைஸ்ராயின் (தற்போதைய ராஷ்டிரபதி பவன்) மாளிகையைக் கட்டிய சிற்பி யார்?
5. புராணங்களில் இந்திரனின் தலைநகர் எது?
6. ரயில் பெட்டிகளை இணைக்கும் தொழிற்சாலை எங்கே உள்ளது?
7. ஐரோப்பாவில் ஓடும் மிகப் பெரிய நதி எது?
8. முதல் முதலில் தபால் தலையை வெளியிட்ட நாடு எது?
10. மனித உடலில் மிகப் பெரிய அவயவம் எது?
11. நம் நாட்டில் பசுமைப் புரட்சியைக் குறிக்கும் பயிர் எது?
12. சக ஆண்டை நடைமுறையில் கொண்டு வந்த மன்னர் யார்?
13. இன்றைய இத்தாலியின் தந்தை என யார் கருதப்படுகிறார்?
14. நம் நாட்டில் நிலக்கரி அதிகமாய்க் கிடைக்கும் மாநிலம் எது?
15. புத்தர் எங்கு 'நிர்வாணம்' எய்தார்?
16. 'ப்ளூ சிப்' என்றால் என்ன?
17. சினிமாக் கொட்டகையே இல்லாத நாடு எது?
18. 'வெள்ளையனே, வெளியேறு' இயக்கம் எப்போது ஆரம்பமாகியது?

## விடைகள்

1. நியூஜிலாந்து
2. 1985ல்
3. வியாழகிரகம்
4. சர் எட்வின் லுட்ன்ஸ்
5. அமராவதி
6. சென்னையின் பெரம்பூரில்
7. ஓல்கா நதி
8. கிரேட் பிரிட்டன்
9. தென் ஆப்பரிக்காவில்டர்பன்நகரருகே உள்ள 'பீனிக்ஸ் பார்ம்'
10. கால்
11. கோதுமை
12. கனிஷ்கர்
13. கரிபால்படி.
14. பீஹார்
15. காசி
16. நிலைத்திருந்து முன்னேற்றம் காணும் 'ஷேர்' (பங்கு)
17. சௌதி அரேபியா
18. 1942 ஆகஸ்ட் 8.



# பாடம் கற்றான்!

**கோ**விலூரில் கோவிந்தன் என்ற ஏழை தன் மனைவி, மூன்று மகன்கள், இரண்டு மகள்கள் என்று குடும்பத்தோடு சிரமப்பட்டு வாழ்ந்து வந்தான். கோவிந்தனின் மூத்த மகன் பாலய்யன். வீட்டின் மற்றவர்களெல்லாம் எதாவது ஒரு கூலி வேலை செய்து பணம் சம்பாதிக்க, பாலய்யன் மட்டும் வேளா வேளைக்குச் சாப்பிட்டு விட்டு ஒரு வேலையும் செய்யாமல் பொழுதைக் கழித்தும் சுகமாக் தூங்கியும் வந்தான். அவன் இவ்வாறு இருக்க காரணம் அவனது தாயார் ரங்கம்மாவே.

வீட்டில் யாருக்கும் சாப்பாடு இல்லாவிட்டாலும் பாலய்யனுக்கு மட்டும் வயிறு நிறைய ரங்கம்மா சாப்பாடு போட்டு வந்தாள். ஒரு வேலையும் செய்யாமல் சாப்பிட்டுத் தூங்கி வந்த அவனோ கொழுத்துப் பருத்து விட்டான். கோவிந்தனும் மற்றவர்களும் சம்பாதித்து வந்த பணமெல்லாம் பாலய்யனின் சாப்பாட்டிற்கும் மற்ற செலவுகளுக்கும் செலவாகி வந்தது குடும்பத்தில் மற்றவர்கள் அரை வயிறு கால் வயிறும் சாப்பிட்டு மெலிந்தே இருந்தனர். ஆனால் பாலய்யனோ சாப்பிட்டுக் கொழுத்துப் பருத்துக் கொண்டே போனான்.

ஒருநாள் கோவிந்தனின் தூர உறவினன் ஒருவன் பட்டணத்திலிருந்து அவனைக் காண வந்தான். அவன் வீட்டின் நிலையைப் பார்த்துவிட்டு கோவிந்தனிடம் ''கோவிந்தா! நீ ஏன் இந்த ஊரில் இருந்து சிரமப்படுகிறாய்? பேசாமல் பட்டணத்திற்கு வந்து விடு. அங்கு நல்ல வேலையும் உங்கள் எல்லோருக்கும் கிடைக்கும், நீங்களும் நன்கு சாப்பிட்டுக் கொண்டு சுகமாக இருக்கலாம்'' என்று கூறி விட்டுப் போனான்.

கோவிந்தனும் அதுதான் சரி என்று

—சங்கர. சுவாமிநாதன்—

நினைத்து இரண்டு நாட்களுக்குப் பின் தன் குடும்பத்தவரோடு பட்டணத்திற்குக் கிளம்பினான். ரங்கம்மாவும் வழியில் எல்லோரும் சாப்பிடக்கட்டு சாதமும் எடுத்துச்சென்றாள். அவர்கள் காட்டு வழியேதான் பட்டணத்திற்குப் போயாக வேண்டும். காட்டிற்குள் போனபோது இருட்டி விட்டதால் எல்லோரும் ஒரு மரத்தடியே தங்கினார்கள்.



எல்லோருக்கும் நல்ல பசியானாலும் பாலய்யன் மட்டும் மரத்தடியில் தங்கியதும் கட்டு சாத மூட்டையை எடுத்து வைத்துக் கொண்டு எல்லாவற்றையும் சாப்பிட்டுவிட்டு அந்த மரத்தடியே படுத்துக் குறட்டை விட்டுத் தூங்கலானான். மற்றவர்களோ எதுவும் சொல்ல முடியாமல் பேசாமல் இருந்தனர்.

கோவிந்தனோ பாலய்யனைத் திட்டவே, ரங்கம்மா அவனுக்காகப் பரிந்து கொண்டு வந்து ''அவன் சாப்பிட்டதால் என்ன? நாம் ஒருநாள் சாப்பிடாமல் இருந்தால் ஒன்றும் சாக மாட்டோம்'' என்றாள். கோவிந்தனோ ''சரி சரி. இங்கிருந்து இப்போதே கிளம்புவோம், இல்லாவிட்டால் புலி, ஓநாய் என்று கொடிய மிருகங்கள் வந்து நம்மைத் தாக்கும்'' என்றாள்.

எல்லோரும் கிளம்பத் தயாரானார்கள். ரங்கம்மா பாலய்யனை எழுப்பினாள். அவனோ குறட்டை விட்டுத் தூங்கினானேயொழியே எழுந்திருக்கவே இல்லை. அதைக் கண்ட கோவிந்தன் ''இவனை இப்படியே விட்டு விட்டு நாமெல்லோரும் போகலாம் இவன் எழுந்து வருகிறபோது வரட்டும்'' என்றான்.

ஆனால் ரங்கம்மா அதற்கு இணங்கவில்லை கோவிந்தனுக்கும், அவளுக்குமிடையே பலத்த வாக்கு வாதம் மூண்டது. அப்போது திடீரென்று ஒரு மூட்டை அவர்கள் முன் வந்து பொத்தென்று விழுந்தது. கோவிந்தன் அதை எடுத்து அவிழ்த்துப் பார்த்தபோது அதில் நிறையப் பணம் இருப்பதைக் கண்டான்.

அப்போது அவன் ''சரி. நாம் நம் ஊருக்கே போய் விடலாம். இதை வைத்துக் கொண்டு சுகமாக வாழ



லாம்'' என்றான். அப்போது மரத்தின் மீதிருந்து ஒரு கரு நிற மனிதன் குதித்து அவர்கள் முன் வந்து நின்றான். அவன் ''இந்தப் பணம் என்னுடையது. நான் சொல்கிறபடி நீ நடந்தால் இதை உனக்குக் கொடுக்கிறேன்'' என்றான்.

கோவிந்தனும் ''சரி சொல். நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்கவே அவனும் ''இங்குள்ளவர்களில் அதோ படுத்துத் தூங்கும் கொழுத்த வாலிபனை எனக்குக் கொடுத்தால் இந்தப் பணத்தை நீ எடுத்துக் கொள்ளலாம்'' என்றான். கோவிந்தனும் அதற்குச் சம்மதித்தான். ஆனால் ரங்கம்மாவோ ''இதென்ன? இவன் யாரோ? நம் பாலய்யனைக் கொண்டுபோய் என்ன செய்வான்?'' என்று கவலைப்பட்டவாறே கூறினாள்.

அந்த மனிதனோ ''இந்த வெட்டிப் பேச்செல்லாம் வேண்டாம். இவரிடம் நான் பேசி முடித்தாகிவிட்டது. பணத்தை எடுத்துக் கொண்டு அவனை இங்கேயே விட்டு விட்டு நீங்கள் போய் விடுங்கள். நான் இவனை என் இஷ்டப்படி என்ன வேண்டுமானாலும் செய்வேன். நான் யார் தெரியுமா? ராட்சஸன் ஆனாலும் நேர்மை தவறாதவன். நான் சாப்பிடும் மனிதனுக்கு விலை கொடுத்து விட்டுத்தான் அவனைக் கொன்று தின்பேன். இன்று இவன்தான் என் உணவு'' என்றான்.

அதைக்கேட்டு ரங்கம்மா ஓவென அழுதாள். கோவிந்தனும் ''இதற்கு நான் ஒப்பமாட்டேன். உன் பணத்தைக் கொடுத்து விடுகிறேன். நீ போய்விடு'' என்றான் ராட்சஸனோ ''முடியாது எனக்கு அவன்தான் வேண்டும். நான் வேறு யாரையும் தொடக் கூட மாட்டேன். ஏனெனில் உங்களில் யாரைச் சாப்பிட்டாலும் என் பசி அடங்காது அவன்தான் கொழுத்திருக்கிறான்'' என்றான்.

அதைக்கேட்டு கோவிந்தனும் அவனது குடும்பத்தினரும் பாலய்யனுக்காக ஒப்பாரி வைக்கலானார்கள். ராட்சஸனோ ''நன்றாக அழுதால்தான் இவன் தூக்கம் கலைந்து எழுந்திருப்பான். அப்போதுதான் நானும் இவனை விழுங்க முடியும். நான் தூங்குபவனைக் கொல்லமாட்டேன்''

என்றான்.

அதைக் கேட்டு கோவிந்தனும் அவனது குடும்பத்தவரும் அழுகையை நிறுத்தினார்கள். ராட்சஸனோ பாலய்யனைப் பார்த்தான். அவன் தூக்கம் கலைந்து எழுந்திருக்கவில்லை. பாலய்யன் நன்கு சாப்பிட்டுப் படுத்துக்தூங்கிவிட்டால் லேசில் எழுந்து விடுபவனல்ல. அதனால் அவன் உயிர் தப்பி விடுவான் என எண்ணி கோவிந்தன் குடும்பத்தினர் மகிழ்ந்தனர்.

ராட்சஸனோ பாலய்யனை உருட்டிப் புரட்டிப் பார்த்தான். அப்போதும் அவன் தூக்கத்திலிருந்து எழவில்லை. காட்டிற்குக் போய் அவன் நான்கு யானைகளை ஓட்டி வந்து அவற்றைப் பிளிறச்செய்து அவனைச்சுற்றிச் சுற்றி வட்டமிடச் செய்தான். அதனாலும் அவன் தூக்கத்திலிருந்து எழவில்லை. ராட்சஸன் மறுபடியும் காட்டிற்குள் போய் இரண்டு சிங்கங்களைப் பிடித்து வந்து பாலய்யன் முன் விட்டான். அவை பலமாக கர்ஜித்தன. அப்போதும் பாலய்யனின் தூக்கம் கலையவில்லை. அது கண்டு ராட்சஸன் இரு காட்டுப்பூனைகளைக் கொண்டு வந்து பாலய்யனருகே விட்டு பயங்கரமாகச் சண்டையிடச் செய்தான். அந்தக் கத்தலுக்குக் கூட பாலய்யன் கண் விழிக்கவில்லை.

ராட்சஸன் எவ்வளவு முயன்றும் பாலய்யனை எழுப்பவே முடியவில்லை. இதற்குள் சூரியோதயமும்



ஆகிவிட்டது. அப்போது ராட்சஸன் ''இனி நீங்கள் உங்கள் ஊருக்குப் போங்கள். இவனை என்னால் எழுப்ப முடியவில்லை. இவனுக்காகப் பணம் கொடுத்தாலும் அந்த நாளில் இவனைச் சாப்பிட முடியாததால் இன்று இவனை விட்டு விடுகிறேன். ஆனால் ஒரு வருடம் கழித்து அங்கு வந்து இவனைத் தூக்கிச் செல்கிறேன். பணத்தை நீயே வைத்திரு'' என்று கூறிவிட்டுப் போய் விட்டான்.

இதற்குச்சற்று நேரத்திற்குப் பிறகே பாலய்யன் கண் விழித்து எழுந்தான். ரங்கம்மா நடந்ததை எல்லாம் அவனிடம் கூறி'' நீ இரண்டு மூன்று வருஷங்களுக்கு எங்கேயாவது தலை மறைவாகப் போய் இருந்து விட்டு வா''

என்றாள். அவனோ ''என்னம்மா இது? பணம் இல்லாத போது என்னை வைத்துக் காப்பாற்றினாயே. இப் போது பணம் வந்ததும் என்னை விரட்டுகிறாயே'' என்று கேட்டான்.

ரங்கம்மாவும் ''ஒரு வருடம் கழித்து ராட்சஸன் வந்தால் அவன் பணத்தைத்திருப்பிக் கொடுக்க வேண் டுமே. நீ இங்கேயே இருந்தால் அவன் கொடுத்த பணம் செலவாகி விடும். அப்புறம் உன்னை நாங்கள் இழக்கத் தானே வேண்டிவரும்?'' என்றாள்.

பாலய்யனுக்கு இது ஒரு பெரிய பிரச்னையாக இருந்தது. அவனுக்குத் தன் குடும்பத்தை விட்டுப் பிரிந்து போக மனமில்லை. ஆனால் குடும் பத்தில் எப்போதும் போல இருந்து வந்தால் ஒரு வருடம் கழித்து ராட்சஸன் வந்து அவனைத் தூக்கிக் கொண்டு போய் விடுவான். அவன் சற்று யோசித்துப் பார்த்தான். முடி வில் அவனுக்கு ஒரு வழி தெரிந்தே விட்டது.

ஆனால் பாலய்யன் தன் தாய் கூறிய படித்தலை மறைவாய்ப் போய் விடா மல் குடும்பத்தில் ஒருவனாக இருந்து மற்றவர்களைப் போல உழைத்துப் பணம் சம்பாதித்துக் கொடுக்கலா னான். அவன் முன்போல சோம்பேறி யாக இருக்கவில்லை. சாப்பிட்டு சாப் பிட்டுத் தூங்கவும் இல்லை. அதனால் அவனது உடல் பருமனும் கொழுப்பு சத்தும் குறைந்தது இதனால் அவன் மற்றவர்களைப் போல ஒல்லியாக ஆகிவிட்டான்.

ஒரு வருடம் கழித்து வந்த ராட்ச ஸன் பாலய்யனைக் கண்டு திகைத்துப் போய் ''இவனா நான் பார்த்த வாலி பன்? மிகவும் மெலிந்து போய் விட் டானே'' என்று கேட்டு ''இவன் எனக்கு வேண்டாம்'' என்று கூறித் தான் கொடுத்த பணத்தை கோவிந் தனிடமிருந்து வாங்கிக் கொண்டு போய் விட்டான்.

ராட்சஸனின் செயலால் பாலய்யன் திருந்தி விட்டான். அவன் சோம்பலை விட்டு விட்டு சுறுசுறுப்புள்ளவனாக ஆகி விட்டான்.





# யார் மேலானவர்?

மங்களபுரியின் மன்னன், மார்க்க சேனன் மற்ற மன்னர்களினின் றும் வேறுபட்டவன். அவன் தன்னை மக்களின் ஊழியன் என்றே கருதிய தோடு ஆடம்பர வாழ்வை விட்டு எளிய வாழ்வே வாழ்ந்து வந்தான்.

மங்களபுரி அரண்மனை மிகப் பெரியது. அதில் ஐம்பது அறைகளும் ஒரு நடன அரங்கமும் ஐந்து பெரிய குளியலறைகளும் இருந்தன. நூறு ஆண் பணியாளர்களும் ஐம்பது பணிப் பெண்களும் அரண்மனையைச் சுத்த மாக வைத்திருக்க நியமிக்கப்பட்டிருந் தனர். இருபது காவல் வீரர்கள் அரண் மனையைக் காவல் காத்து வந்தார்கள்.

மார்க்கசேனன் மன்னனானதும் அரண்மனை கலைகளுக்கான மைய மாக மாற்றப்பட்டது. அங்கு பலவிதக் கலைகளைக் கற்பிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அதனால் அயல் நாடு களிலிருந்தும் மாணவர்கள் சிற்பம், ஓவியம், இசை, நாட்டியம் போன்ற கலைகளைக் கற்க அங்கு வரலானார் கள்.

மார்க்கசேனன் கோட்டைக்குள் ஒரு சிறிய வீட்டில்தான் வசித்து வந் தான். அங்கு விலையுயர்ந்த பொருள் எதுவும் இருக்கவில்லை. அவன் தன் தேவைக்கான சாமான்களை மட்டும் மாதா மாதாம் வாங்கி வந்தான். தனக் கான வசதிகளைத் தானே செய்து கொண்டான்.

இப்படி இருக்கையில் கதம்பபுரி அரசகுமாரி காமினியின் சுயம் வரத் திற்கு மார்க்கசேனன் போயிருந்தான். இன்னும் பல அரசகுமாரர்களும் வந் திருந்தார்கள். காமினி மார்க்கசேன னின் அழகைக் கண்டு மகிழ்ந்து அவன் கழுத்தில் சுயம் வர மாலையைப் போட்டாள்.

மார்க்கசேனன் அவளது கையைப் பற்றிக் கொண்டு "கதம்பபுரி மன்ன

—பாபநாசம் சாமா—



ருக்கு நான் விடுக்கும் வேண்டுகோள் இதுவே இப்போது முதல் காமினி என் மனைவி. அதனால் அதிக ஆடம்பர மில்லாமல் இவளை உடுத்திய உடை களோடு என்னுடன் அனுப்ப வேண் டும். சீர்தனம் என்று எதுவும் அனுப்பக் கூடாது'' என்றான்.

கதம்புரி மன்னனோ ''எங்கள் வழக்கம் ஒரு மகளுக்கு வேண்டிய பொருள்களை எல்லாம் தந்தை கொடுப்பதுதான். நான் இவளுக்குக் கொடுப்பதை நீங்கள் ஏற்க மறுக்கக் கூடாது'' என்றான். மார்க்கசேனனோ ''மக்களின் பணத்தை சீதனமாகப் பெறுவது என் வழக்கமல்ல. நீங்களாக உழைத்துச் சேர்த்த பொருள் எதாவது இருந்தால் அதைக் காமினிக்குக் கொடுங்கள்'' என்றான்.

அம்மன்னனும் ''அப்படியானால் உனக்கு உன் தந்தை தன் உழைப்பால் சம்பாதித்த பொருள்களைத் தான் கொடுத்து விட்டுப் போனாரோ?'' என்று கேட்டான். மார்க்கசேனனும் ''ஆமாம். மங்களபுரி அவருடைய சக்தி சாமர்த்தியத்தால் தான் நிலைத்து நிற்கிறது. அந்த நாட்டை அவர் எனக்கு அளித்தார். அதைக் காக்க இளம் வயதி லிருந்தே நான் பயிற்சி பெற்றேன். மன்னனானதும் நான் ஆட்சிப் பொறுப்பைத் தான் ஏற்றேன். அதன் பணத்தை ஏற்கவில்லை அரசனுக் குரிய ஆடம்பரங்களை ஏற்கவில்லை. மக்களின் ஊழியனாக நான் மாத ஊதியம் பெற்று அதற்கு ஏற்ப ஒரு சிறு வீட்டில் வாழ்ந்து என் உழைப்பில் எனக்கு வேண்டிய பொருள்களை வாங்கிக் கொள்கிறேன்'' என்றான்.

அப்போது அங்கிருந்த அரசர்கள் ''ஓ! அப்படியானால் காமினி இனி மேல் பொதுமக்கள் சேவகியா?'' என்று கேலியாகக் கேட்டார்கள். கதம்பபுரி மன்னன் கோபத்தோடு ''நான் காமினியை அருமை பெருமை யாக வளர்த்தேன். சுகவாழ்வில் வாழ்ந்த என் மகள் உன்னோடு இருந் தால் சுகப்பட மாட்டாள். உன்னைப் பற்றி காமினி அறியாமல் உன்னைத் தேர்ந்தெடுத்து தவறு புரிந்து விட் டாள். நீ சன்னியாசி. என் மகளின் வாழ் வைப் பாழடித்து விட்டாய். இது உனக்கே நன்றாக இருக்கிறதா?''

என்று கேட்டான்.

அப்போது காமினி ''என் முடிவு தவறாகக் கூடாது. இப்போது எங்கள் விவாகம் ஆகிவிட்டது. கணவன் கூறுகிற படி நடக்க வேண்டியது மனைவியின் கடமை. நான் என் கணவரோடு போகத்தான் போகிறேன். நான் அவருக்கு அனுசரணையாக இருக்க வேண்டும். எது எப்படியானாலும் நாங்கள் அன்னியோன்னியமாகவே இருப்போம் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன்'' என்றாள்.

மார்க்கசேனன் காமினியுடன் மங்களபுரிக்கு வந்து சேர்ந்தான். காமினி மார்க்கசேனனின் மிகச் சிறிய வீட்டைப்பார்த்து ''இதுவா மகாராணி வாழும் இடம்?'' என்று முகத்தைச் சுளித்தவாறே கேட்டாள். அது கேட்டு மார்க்கசேனன் சிரித்து ''நாட்டை ஆண் ஆண்டால்தான் அவன் மகாராஜா. அது போல நாட்டை ஒரு பெண் ஆண்டால்தான் அவள் மகாராணி. நீ நாட்டை ஆளவில்லை. ஆனால் மகாராஜாவின் மனைவி நான் இந்த வீட்டிற்கு மாதாமாதம் வாடகை கொடுக்கிறேன். வேலையாளுக்கும் காவல்காரனுக்கும் என் சம்பளப் பணத்திலிருந்துதான் அவர்களுக்குப் பணம் கொடுக்க வேண்டும். நான் வாங்கும் சம்பளத்தில் இதை விடப் பெரிய வீடாக வாடகைக்கு எடுத்துக்கொள்ள முடியாது'' என்றான்.

காமினிக்கு அவன் கூறியது பிடிக்காது போனாலும் அவன் மீது கொண்ட அன்பால் சகித்துக் கொண்டாள். ஒரு பணியாளுடன் வீட்டு





வேலைகளைச் செய்து எப்படியோ காலம் கழிக்கலானாள். ஒருநாள் அவள் மார்க்கசேனனிடம் ''நீங்கள் வீட்டில் இல்லாத போது எனக்குப் பொழுதே போவதில்லை. ஆடல் பாடல் இல்லை. தோழிகள் இல்லை. என்ன செய்வது?'' என்று கேட்டாள்.

அவனும் ''நேரத்தை வீணாக் காதே. இங்கு பல புத்தகங்கள் உள்ளன. அவற்றைப்படி. எதாவது ஒரு தொழில் செய்யக் கற்றுக் கொள். அப்போது பொழுது போவதே தெரியாது'' என்றான். காமினி அவ்வாறே செய்து அவ்வித வாழ்க்கைக்குத் தன்னைப் பழக்கப் படுத்திக் கொண்டாள்.

மார்க்கசேனன் திறமையுடன் ஆட்சிபுரிபவன். மக்களின் நலனையே குறியாகக் கொண்டு சோம்பலில்லாமல் வேலைகளைச் செய்து வரவே அரசாங்க ஊழியர்களும் அவனைப் போலவே வேலை செய்து வரலானார்கள். இந்நிலையில் ஒருநாள் அமிருதானந்தர் என்ற முனிவர் மார்க்கசேனனைக் காணவந்தார்.

அவரை அவன் வரவேற்றுத் தக்கபடி உபசரித்து மரியாதை செய்யவே அவரும் ''நான் இமயமலையில் தவம் செய்து கொண்டிருந்தபோது கடவுள் என் முன் தோன்றி ''அப்பனே. நீ மக்கள் நலனையே கருதும் நேர்மையான மன்னனின் ஒரே ஒரு கோரிக்கையை மட்டும் தீர்த்தால் மோட்சத்தை அடைவாய்'' என்று கூறினார். நான் இப்படிப்பட்ட மன்னன் தர்மசீலன் என்று எண்ணி அவனைக் கண்டேன். ஆனால் அவனோ ''நான் ராஜரிஷி எனக்கு எவ்விதக் கோரிக்கையும் இல்லை. என் நாட்டு மக்கள் சுகமாக இருக்க வேண்டும் என்பது ஒன்றுதான் என் கோரிக்கை. இது எவ்வளவு சரி என எனக்குத் தெரியாது. ஆனால் மங்களபுரியின் மன்னன் மார்க்கசேனன் என்னை விட உயர்ந்தவன், மிகவும் நேர்மையானவன் என நான் கருதுகிறேன். நீங்கள் அவரையும் பார்த்து விட்டு ஒரு முடிவிற்கு வாருங்கள்'' என்று கூறினான். அதனால்தான் இங்கு வந்தேன்'' என்றார்.

இதைக் கேட்ட மார்க்கசேனன் சிறிது நேரம் யோசித்து விட்டு ''தவ

சிரேஷ்டரே! என் நாட்டை நன்கு வைத்திருக்க வேண்டியது. என் கடமை. அந்தக் கடமையை நானே சரி வரச் செய்து வருவேனேயொழிய கடவுளிடம் ஒப்படைக்க மாட்டேன். ஆனால் ஓய்வு நேரத்தில் சற்று உல்லாசமாக இருக்க வேண்டுமென்ற எண்ணம் எனக்கு எற்படுகிறது. அது நிறைவேறினால் என் மனைவியும் மகிழ்ச்சி அடைவாள். தங்களுக்கு நான் நினைப்பது சரி என்று தோன்றினால் என் இந்தக் கோரிக்கையை நிறைவேற்றி வையுங்கள்'' என்றான்.

அதைக் கேட்ட அமிருதானந்தர் அவனுக்கு ஒரு பொம்மையைக் கொடுத்து ''மன்னனே இந்த பொம்மை நீ விரும்புவதை எல்லாம் கொடுக்கும். இதை நீ ஒருவன் மட்டும் தான் உபயோகிக்க முடியும்'' என்றார். அப்போது மார்க்கசேனன் ''சுவாமி! உங்கள் வரத்தால் தர்மசீலனே பயனடைய வேண்டும் என்றும் நான் பயனடையக் கூடாது என்றும் எண்ணியே என் கோரிக்கையைத் தங்களிடம் வெளிப்படுத்தினேன். என்னிலும் அவர் தன்னலமற்றவர். எந்தக் கோரிக்கையையும் கேளாத அவரை விட்டு விட்டு என்னிடம் ஏன் வந்தீர்கள்?'' என்று கேட்டான்.

அமிருதானந்தரும் புன்னகை புரிந்தவாறே ''தர்மசீலர் ராஜரிஷி. அவருக்கு எவ்விதக் கோரிக்கையும் இல்லை. எதிலும் விருப்பில்லாதவன் உல்லாச விஷயங்களை விட்டு விலகி இருப்பதில் ஆச்சரியம் இல்லை. நீயோ நேர்மையுடன் செவ்வனே ஆட்சி புரிபவன். நீ உல்லாசமாய்ப் பொழுது போக்க நினைத்தாலும் அதற்காக அரசாங்கப் பணத்திலிருந்து ஒரு செப்புக்காசுகூட எடுக்கவில்லை. எனவே நீ தர்மசீலரை விட உயர்ந்தவன். எனவே நீதான் என் வரத்தை ஏற்கத் தக்கவன்'' என்றார்.

மார்க்கசேனனும் ஒழிந்த நேரங்களில் அமிருதானந்தர் கொடுத்த பொம்மையால் உல்லாசமாகப் பொழுது போக்கி மனம் மகிழலானான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1996 ஏப்ரல் மாத இதழில் வெளியிடப்படும்.



L. Bhavani



Teji Prasad

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ பிப்ரவரி 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

## டிசம்பர் மாதப் போட்டி முடிவு

| | |
|---|---|
| முதலாவது போட்டோ | : **ஒப்பனை எழுதுவது கற்பனையில்!** |
| இரண்டாவது போட்டோ | : **கற்பனை முடிவது விற்பனையில்!** |
| பரிசு பெற்றவர் | : **திரு. எம். நடராஜன், ஈரோடு - 1.** |




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.